Regd. No. M. 8594 Phone No. 2184

# ஜனசக்தி

JANASAKTHI

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

(வெளியூர் பதிப்பு)



மலர் 16 இதழ் 53] சென்னை 8-10-59 விகாரி ஆண்டு புரட்டாசி 22உ வியாழக்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# அரிசி மூட்டை ரூ. 34க்கு வாங்கி ரூ. 42க்கு விற்பதேன்?

## இதுதான் நியாய விலையா?

### மூட்டைக்கு ரூ. $7\frac{1}{2}$ செலவு ஏன்?

### சர்க்கார் அறிக்கைக்கு சவால்

### புள்ளிகள் பேசுகின்றன

சென்னை, அக். 7—

நியாயவிலைக் கடைகளில் அரிசி விற்பனை செய்வது மூலம் சர்க்கார் லாபமடிக்கவில்லை என்று சென்னை சர்க்கார் அக். 3-ந் தேதியன்று விடுத்துள்ள அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது. சர்க்காரோ மற்றவர்களோ லாபம் பெறுகிறார்களா என்பதல்ல இங்கு உள்ள பிரச்சினை. இந்த நியாயவிலைக் கடைகளில் விற்கப்படும் அரிசிக்கு நிர்ணயம் செய்துள்ள விற்பனை விலை நியாயவிலை தானா? என்பதே பிரச்சினை என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு கவுன்சில் சார்பில் தமிழ்நாடு செயற்குழு விடுத்துள்ள அறிக்கை குறிப்பிடுகிறது.

சர்க்காரின் அறிக்கைக்குச் சவால்விடும் முறையில் புள்ளி விபரங்களைச் சுட்டிக் காட்டியுள்ளது. அவ்வறிக்கை மேலும் கூறுவதாவது.

நியாயவிலைக் கடைகள் மூலம் விற்பனை செய்யப்படும் இண்டாம் தரம் அரிசியைக் கொள்முதல் செய்யுர்வகையில் சர்க்கார் மில்களுக்குக் கொடுக்கும் விலை மணங்குக்கு 17 ரூபாய்: அதாவது மூட்டைக்கு ரூ 34 (ஒரு மூட்டைக்கு 2 மணங்கு, 47 பட்டணம் படி) இதை சர்க்காரே ஒப்புக்கொள்கிறது. பட்டணம்படி ஒன்றுக்கு 88 நயா பைசா விலைக்கு விற்பனை செய்தால் மூட்டைக்கு ரூ 41-36 நயா பைசா கிடைக்கும். வாங்கிய விலையைவிட இது ரூ 7-36 ந.பை. அதிகம். இதுதான் வாங்குவோருக்கு அளிக்கும் நீதியா? இத்தனை பெரிய விலை வித்தியாசம் ஏற்படுவதை நியாயப்படுத்த முடியுமா?

#### யதேச்சாதிகாரமாக நிர்ணயிக்கப்பட்டவை

வாங்கும் விலைக்கும் விற்பனை விலைக்கும் இடையில் உள்ள இந்த விலை வித்தியாசத்தை— பல்வேறு செலவுகளால் ஏற்பட்டது என்று இனம் பிரித்துக் காட்டிமக்களை ஏமாற்ற சர்க்கார் முயல்கிறது தனித்தனியாக ஒவ்வொரு செலவு இனத்தையும் எடுத்துப் பார்த்தால், யதார்த்த நிலைக்குச் சற்றும் சம்பந்தமில்லாத முறையில் சர்க்கார் யதேச்சாதிகாரமாக இந்தச் செலவினங்களை நிர்ணயித்திருக்கிறது என்பது தெரியவரும்.

குடோன் வாடகை பணங்குக்கு 25 நயா பைசா—மூட்டைக்கு 50 நயாபைசா என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. சென்னை நகரில் டி. யு. சி. எஸ். ஸ்தாபனத்திற்கு சர்க்கார் குடோன்கள் அனுமதிக்கப்பட்டுள்ளன. டி. யு. சி. எஸ். கொடுக்கும் நிஜ வாடகை மூன்று மாதங்களுக்கு மூட்டை ஒன்றுக்கும் பத்து நயா பைசாகூட ஆகவில்லை. சென்னைக்கு வெளியே வெளி ஜில்லாக்களில் குடோன் வாடகை சென்னையை விடக் குறைவானதே.

இன்ஷியூரன்ஸ் கட்டணத்தை எடுத்துக் கொள்வோம். இது மணுவுக்கு 8 நயா பைசா என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஆனால் இன்ஷியூரன்ஸ் கம்பெனிகள் தீ விபத்து இன்ஷியூரன்ஸ் பிரிமியமாக 100 ரூபாயக்கு 3 அணாவே வசூலிக்கின்றன. இதன்படி பார்த்தால் இன்ஷியூரன்ஸ் கட்டணம் மணங்குக்கு 3 நயா பைசாவுக்குள் அடங்க வேண்டும்.

#### அதிகச் செலவு

போக்கு வரத்துச் செலவைப் பார்ப்போம். மொத்த வியாபாரி தனது குடோனிலிருந்து சில்லரைக் கடைக்கு அரிசியை எடுத்துச் செல்லப் போக்கு வரத்துக்காக மணங்குக்கு 19 நயாபைசா—மூட்டைக்கு 38 நயா பைசா என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அரிசி மூட்டை கொண்டு செல்லும் போக்குவரத்து ஏற்பாடு பற்றித் தெரிந்த எவரும் இந்தச் செலவு மூட்டைக்கு 25 நயா பைசாவுக்குமேல் போகாது என்பதை அறிவார்கள். மலங்கனியிலிருந்து ரயில்வே ஸ்டேஷன், ரயில்வே ஸ்டேஷனிலிருந்து குடோன்; குடோனிலிருந்து சில்லரை விற்பனைக் கடை இவற்றுக்குள் கொண்டு செல்ல போக்கு வரத்துச் செலவுக்குத் திட்டமிட்டிருக்கிறது சர்க்கார் இதைத்தவிர மேலும் ஒரு எடுபிடிச் செலவு என்று ஒரு ரூபாயான செலவைச் சேர்த்திருக்கிறார்கள். இதேபோலப் புகையடிப்பதற்காக என்றும் ஒரு செலவினம் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆனால் புகையடிப்புச் செய்யப்படுவதில்லை.

மேலும் சிப்பந்திகள் செலவு என்று 17 நயா பைசாவைச் சேர்த்திருக்கிறது சர்க்கார். மந்திரி வெளியிட்ட சென்னை அரிசி கையின் பிரகாரம் 4 வாரங்களில் டி யு. சி. எஸ் கடைகள் மூலம் 85 ஆயிரம் மணங்கு அரிசி விற்பனை செய்யப்பட்டிருக்கிறது. இந்த வெள்ளை அறிக்கை 8-9-59-ல் சட்டசபையில் சமர்ப்பிக்கப்பட்டது. இக்கணக்குப்படியில் 42 ஆயிரம் மூட்டை அரிசியைக் கொள்முதல் செய்து விற்பனை செய்ய டி யு. சி. எஸ். சிப்பந்திகளுக்கு 14 ஆயிரம் ரூபாய்க்கு மேல் செலவழித்திருக்கிறது என்று கொள்வதாகும். இது சற்றும் நம்பமுடியாத விஷயம்.

#### புள்ளி விபரங்கள்

கொள்முதல் விற்பனை விவகாரங்களுக்காக நியாயமாயும் சாதாரணமாயும் ஏற்படக்கூடிய செலவு என்ன? சர்க்கார் அனுமதித்திருக்கும் செலவு எவ்வளவு என்பதைக் கீழ் வரும் அட்டவணை எடுத்துக் காட்டுகிறது.

#### 1 மணங்கு அரிசிக்கு

| இனம் | நியாயமான கட்டணம் | சர்க்கார் அனுமதித்துள்ள கட்டணம் |
|---|---|---|
| (1) மலங்களிலிருந்து ரயில்வே ஸ்டேஷனுக்கும், (ஏற்றுமதி) ரயில்வே ஸ்டேஷனிலிருந்து குடோனுக்கும் (இறக்குமதி) கொண்டுவர எடுபிடி வண்டி செலவுகள். | 0-19 | 0-19 |
| (2) குடோன் வாடகை. | 0-05 | 0-25 |
| (3) காய்ச்சல் செலவு. | 0-15 | 0-16 |
| (4) புகையடிப்பு. | இல்லை | 0-03 |
| (5) முதலீட்டுக்கு வட்டி. | 0-25 | 0-50 |
| (6) இன்ஷ்யூரன்ஸ் கட்டணம். | 0-03 | 0-08 |
| (7) மொத்த வியாபாரியின் குடோனிலிருந்து சில்லரை வியாபாரக்கடைக்குக் கொண்டு செல்ல போக்குவரத்துச் செலவு | 0-12 | 0-19 |
| (8) எடுபிடிச் செலவு. | இல்லை | 0-19 |
| (9) சிப்பந்திகள் செலவு | 0-05 | 0-17 |
| (10) அனுமதிக்கப்பட்ட மிகர் லாபம். | 0 12 | 0-12 |
| மொத்தம் ... | 0-96 | 1 87 |

மொத்தச்செலவு மணங்குக்கு 96 நயா பைசாவாகிறது மேலும் ஏற்படும் செலவுக்கு சர்க்கார் விபரம் கொடுக்கவில்லை. சாக்கு விலை, விற்பனை வரி, ரயில்வே

(4-ம் பக்கம் பார்க்க)

## உணவுப் போராட்டத்தை தொடர்ந்து நடத்தவேண்டும்

### கம்யூனிஸ்ட் கட்சியின் செங்கற்பட்டு ஜில்லா கவுன்சில் முடிவு

சென்னை, அக். 5—

3, 4 தேதிகளில் திருவொற்றியூரில் கம்யூனிஸ்ட் கட்சியின் செங்கற்பட்டு ஜில்லா கவுன்சில் கூட்டம் நடந்தது. ஜில்லா கவுன்சில் உறுப்பினர்கள் தாலுகா, நகர கமிட்டி உறுப்பினர்கள், ஜில்லாவிலுள்ள எல்லா கிளைகளின் செயலாளர்கள் ஆக 46 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

மாகாண கமிட்டி செயற்குழு உறுப்பினர் தோழர் வி. பி. சிந்தன் இரண்டு நாள் விவாதத்திலும் கலந்துகொண்டு இன்றைய அரசியல் நிலைமையையும் உணவுப் போராட்டத்தின் அவசியத்தையும் விளக்கினார்.

பின்வரும் முடிவுகள் எடுக்கப்பட்டன:

1. விலைவாசி உயர்வைக் கட்டுப் படுத்தவும், மலிவு விலையில் உணவு தானியங்கள் (படி அரிசி 12 அணுவுக்கு) கிடைக்கவும் ஜில்லா முழுவதிலும் இயக்கங்களைத் தொடர்ந்து நடத்துவது.

2. சகல கட்சிகளையும் ஸ்தாபனங்களையும் கொண்ட போராட்டக் கமிட்டி அமைத்தல்.

3. சர்க்காருக்கு மகஜர் சமர்ப்பிப்பது.

#### ஊர்வலம், பொதுக்கூட்டம்

4ந் தேதி மாலை ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடந்தன. ஆயிரக்கணக்கான மக்கள் கூட்டத்திற்கு வந்திருந்தனர்.

ஊர்வலத்தில் வானளாவிய செங்கொடிகளை ஏந்திக்கொண்டும் 'படி அரிசி 12 அணுவுக்குக் கொடு, 500 குடும்பங்களுக்கு ஒரு நியாயவிலைக் கடையைத் திற' 'விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்து', 'பதுக்கல்காரர்களைக் கைது செய்' என்பன போன்ற கோஷங்களை முழங்கிக் கொண்டு நகரின் பல பகுதிகளில் சுற்றி வந்தனர்.

தெருக்களில் பெண்களும் ஆண்களும் கூட்டம் கூட்டமாக நின்று ஊர்வலத்தை ஊக்குவித்தனர்

கூட்டத்திற்கு தோழர் கே. எஸ். பார்த்தசாரதி தலைமை தாங்கினார். தோழர் எஸ். ஏ. முருகானந்தம் பேசுகையில் இன்றைய நேரு சர்க்காரின் ஜனநாயக விரோத கொள்கையைக் கண்டித்தார். உணவு நெருக்கடி பற்றியும் விவரித்தார்.

தோழர் வி. பி. சிந்தன் பேசுகையில் எல்லா மாற்று கட்சிகளும் ஒன்று சேர்ந்து கிளர்ச்சி செய்து விலைவாசி உயர்வைக் குறைக்கவும் மலிவு விலையில் தானியங்கள் கிடைக்கவும் வழி செய்ய வேண்டுமென்றார்.

பாவலர் கன்னியப்பன் குழுவினர் இன்னிசைக் கச்சேரியும் நடந்தது

## உபரிநிலம் அதிகமாக இருக்காதாம்

### பெயரளவில் நிலச்சட்டம் கொண்டு வர காங்கிரஸ் சர்க்கார் திட்டம்

### நிலப்பிரபுக்களுக்கு நிதிமந்திரி அபயம்

சென்னை, அக். 7—

"சென்னை மாநிலத்தில் கொண்டுவரப்படும் நிலச்சீர்திருத்த மசோதா புரட்சிகரமான முறையில் இருக்காது. சிலர் கற்பனை செய்துகொண்டிருப்பதுபோன்று தீவிரமாகவும் இருக்காது" என்று நிதி அமைச்சர் சி. சுப்பிரமணியம் கூறினார்.

"நிலவுடைமை வரம்புச் சட்டம் வருமென்று அரசாங்கம் அறிவித்துவிட்ட பின்னர் பல நிலச்சுவான்தார்கள் நிலங்களையெல்லாம் பங்கு போட்டு பிரித்து எழுதி வைத்துவிட்டார்கள். எனவே விநியோகத்திற்கென்று உபரியாகக் கிடைக்கும் நிலமும் மிகக் குறைந்த அளவிலேயே கிடைக்கும்" என்றும் நிதி அமைச்சர் கூறினார்.

அவர் மேலும் கூறுகையில், "உபரி நிலம் மிகக் குறைவாகக் கிடைக்குமாதலால் விநியோகம் செய்வதில் எவ்வித கஷ்டமும் இருக்காது. உபரியாக நிலம் வைத்துக் கொண்டிருக்கின்ற நிலச்சுவான்தார்களின் எண்ணிக்கையும் மிகக்குறைவாகவேஇருக்கும்" என்றார்.

#### நஷ்டயீட்டில்பிரச்னையாம்

அவர் தொடர்ந்து கூறுகையில், உபரி நிலம் சாகுபடி செய்துகொண்டிருக்கும் உழவர்களுக்குச் சொந்தமாகு பொழுது, அவர்கள் எப்படி நிலத்திற்கு, நிலச்சுவான்தாருக்கு நஷ்ட ஈடு கொடுப்பார்கள் என்ற பிரச்சினையும் எழுகிறது; இப்போதைய ஏற்பாட்டின்படி மசோதா நவம்பர் மாதம் தயாராகி, டிசம்பர் மாதம் சட்டமன்றம் விவாதிக்க வேண்டும்" என்றார். ஆனால் நவம்பர் மாதத்திற்குள்ள வது மசோதா தயாராகிவிடும் என்று அமைச்சர் உறுதி கூறவில்லை.

"இதுவரை எந்தெந்த மாநிலங்களில் மசோதா கொண்டுவரப்பட்டுள்ளதோ அவற்றையெல்லாம் பரிசீலித்து, நிலச்சீர்திருத்தம் சம்பந்தமான பல்வேறுபிரச்சினைகள் எப்படித் தீர்க்கப்பட்டிருக்கின்றன என்று ஆராய்ந்து, நமது மாநில நிலைமையையும் கணக்கிலெடுத்துக் கொண்டு மசோதா தயாரிக்கப்படுகிறது" என்று மந்திரி கூறினார்.

## உணவு இயக்கப் பொதுக்கூட்டங்கள்

#### ப. ஜீவானந்தம்

| | | |
|---|---|---|
| அக். | 10, 11 | தஞ்சை ஜில்லா |
| ,, | 13, 14 | தென்னாற்காடு ஜில்லா |
| ,, | 15 | சென்னை |
| ,, | 17 | திருப்பத்தூர் (வடாற்காடு ஜில்லா) |
| ,, | 18 | வேலூர் |
| ,, | 22 | திருச்சி |
| ,, | 23 | நாகர்கோவில் |
| ,, | 25, 26 | கோவை ஜில்லா |
| ,, | 29 | சென்னை |

#### பி. ராமமூர்த்தி

| | | |
|---|---|---|
| அக். | 8, 25 | சென்னை |
| ,, | 10, 11 | ஈரோடு |
| ,, | 13 | ராஜபாளையம் |
| ,, | 14, 15 | திருநெல்வேலி |
| ,, | 16, | கன்னியாகுமரி |
| ,, | 17 | மதுரை |
| ,, | 18, 19 | தஞ்சாவூர் |
| ,, | 20, 21 22 | திருச்சி |

#### மணலி கந்தசாமி

| | | |
|---|---|---|
| அக். | 9 | காரைக்குடி |
| ,, | 10 | காளையார்கோவில் |
| ,, | 11 | திருவரம்பூர் |
| ,, | 17, 18, 19 | மதுரை |
| ,, | 20, 21 | திருச்சி |

#### என். சங்கரய்யா

| | | |
|---|---|---|
| அக். | 11, 14 | திருப்பத்தூர் |
| ,, | 15 | விருதுநகர் |
| ,, | 16 | ஸ்ரீவில்லிபுத்தூர் |
| ,, | 18, 19 | நெல்லை |

#### ஏ. பாலசுப்ரமணியம்

| | | |
|---|---|---|
| அக். | 17, 18 | கோயம்புத்தூர் |

#### மதனகோபால்

| | | |
|---|---|---|
| அக். | 17, 18 | தென்ஆற்காடு ஜில்லா |

#### கே. ரமணி

| | | |
|---|---|---|
| அக். | 10, 11 | சேலம் |
| ,, | 23, 24 | திருச்சி |

#### கே.டி.கே. தங்கமணி

| | | |
|---|---|---|
| அக் | 9 | கன்யாகுமரி |
| ,, | 24, 25 | திருச்சி |

#### கே.எஸ். பார்த்தசாரதி

| | | |
|---|---|---|
| அக். | 17 | திமிரி |
| ,, | 18 | பேரளூர் |
| ,, | 26, 27 | தென்னாற்காடு |

#### கே. டி. ராஜு

(சுற்றுப் பயணம் ஏற்கனவே பிரசுரிக்கப்பட்டுள்ளது)

12 கன்னியாகுமரி

## காங்கிரஸ் கரைகிறதே!

### நேருவின் கண்ணீர்

பூனா, அக். 6—

"காங்கிரஸ் கட்சி மக்களிடம் செல்வாக்கு இழந்து வருகிறதே" என்று பிரதமர் நேரு இன்று வருத்தப்பட்டுப் பேசினார்.

காங்கிரஸ்காரர் கூட்டம் ஒன்றில் பேசுகையில் அவர் சொன்னதாவது:

மக்களிடம் நீங்கள் போவதில்லை! இப்படி எத்தனை நாள் பழைய பெருமையில் நீங்கள் காலம் கடத்தலாம் என்று எண்ணுகிறீர்கள்? எனக்குத் தோன்றுகிறது, அதிக காலம் இப்படி போக்க முடியாதென்று. காங்கிரஸ் கட்சி இதே பாதையில் போகுமானால் விரைவில் கரைந்துபோகும்.

காங்கிரஸ் தன் செல்வாக்கை இழக்காமல் இருக்கவேண்டுமானால் நாகபுரி தீர்மானத்தை அமுல் நடத்தவேண்டும்! கூட்டுறவு விவசாயச் சங்கங்களை நிறுவ வேண்டும். இவை தாமதிக்கப்படுமானால் நம்மை மக்கள் மதிக்கமாட்டார்கள்!

இவ்வாறு பிரதமர் நேரு காங்கிரஸ் கட்சியின் சரிந்துவரும் செல்வாக்கை எப்படி நிலை நிறுத்துவது என்பதுபற்றி பேசினார்.

## சோவியத்-அமெரிக்க பேச்சுகள் வெற்றிபெற வேண்டும்

### ஐ நா.வில் கிருஷ்ணமேனன் பேச்சு

ஐக்கியநாடுகள்: அக். 7—

ஐ நா. பொதுச்சபையில் உலக விவகார விவாதத்தில் இந்தியாவின் பாதுகாப்பு மந்திரி கிருஷ்ணமேனன் கலந்து கொண்டார் சமீபத்தில் சோவியத் பிரதமர் குருஷ்சேவ் ஐ நா. பொதுச் சபைக்கு வந்து பேசியது ஒரு மகத்தான சம்பவம் என்று கிருஷ்ணமேனன் வர்ணித்தார்.

இந்திய பாதுகாப்பு மந்திரி கூறியதாவது:— 'சர்வதேச நெருக்கடி தணியவேண்டுமென்ற நோக்கத்துடன் ஐ நா.வுக்கு வெளியே பேச்சுவார்த்தைகள் நடக்கின்றன. பேச்சு நடந்து ஒரு உடன்பாட்டிற்கு வந்து அந்த உடன்பாட்டை அமல் நடத்தக்கூடிய வல்லரசுகள் சோவியத் யூனியனும் அமெரிக்காவும்தான். அவ்விருவல்லரசுகள் இந்த வாய்ப்பை அநுகூலப்படுத்திக்கொள்ள வேண்டும். அவர்களது முயற்சி வெல்க என்று ஐ. நா.விலுள்ள நாம் விழைவோமாக."

## எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்பு அவசியம் இல்லையாம்!

### தன் கட்சி ஆதரவே போதுமாம்

### இலங்கைப் பிரதமர் வீராப்பு

கொழும்பு, அக் 6—

"நான் பதவியில் இருக்க எந்த எதிர்க்கட்சியின் உதவியையும் நாடமாட்டேன். சமாதானமாக அந்தக் கட்சிகளுடன் தற்காலிக ஒப்பந்தம் எதுவும் செய்துகொள்ள மாட்டேன்" என்று இலங்கை புதிய பிரதமர் திரு. தஹநாயகா இன்று கூறினார்.

இலங்கை பத்திரிகை ஒன்றிற்கு அவர் அளித்த பேட்டியில் அவ்வாறு கூறினார்.

தஹநாயகாவின் கட்சிக்கு பார்லிமெண்டில் பூரண மெஜாரிட்டி இல்லாமல் இருப்பது தெரிந்திருக்கலாம்.

புதிய பிரதமர் வலதுசாரி போக்கில் நாட்டை திருப்பி விடுபவர் என்பதற்கு அவர் எடுத்துள்ள இரண்டு நடவடிக்கைகள் சான்று கூறுகின்றன.

மரண தண்டனையை மீண்டும் சட்ட பூர்வமாக அமல் நடத்த அவர் உத்தரவிட்டுள்ளது முதலாவது நடவடிக்கை. வலதுசாரி கட்சியினர்தான் மரணதண்டனை வேண்டும் என்று கிளர்ச்சி செய்து வந்துள்ளனர்.

இரண்டாவதாக உணவு தானிய வர்த்தகத்தை சர்க்கார் மட்டுமே நடத்தலாம் என்ற கொள்கையை புதிய பிரதமர் கைவிட்டு விட்டார். வர்த்தகர்களும் சர்க்காரும் உணவுதானிய வர்த்தகத்தில் ஈடுபடலாமென்று புதிய கொள்கையை அவர் தன் விச்சையாக வெளியிட்டுள்ளார்.

## சீன-இந்திய-பர்மிய எல்லைப் பிரச்சினை

### நேரு-நீவின் பேச்சு நடக்கும்

புதுடில்லி, அக். 6—

பர்மா பிரதமர் நீவின் 8-ந் தேதி புதுடில்லிக்கு வருகிறார். அவர் பிரதமர் நேருவுடன் இந்திய-சீன, பர்மா-சீன எல்லைப் பிரச்சினைகளைப் பற்றி பேச்சு நடத்துவார்.

பர்மா பிரதமர் இந்தியாவில் 3 நாட்கள் தங்குவார்.

## தும்பிவாடி விவசாய ஊழியர்கள் எழுவர் கைது

### போராட்டம் தீவிரமாகிறது

கரூர், அக். 4—

கரூர் தும்பிவாடி கிராமத்தின் விவசாய தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரி செப் 13-ந் தேதி முதல் வீரமிக்க போராட்டம் நடத்தி வருகிறார்கள்.

கருங்காலியாக வேலை செய்வதற்கு மிராசுதாரர்களுக்கு ஒரு ஆள்கூடக் கிடைக்கவில்லை

மாதமொன்றுக்கு 24 வள்ள தானியமும், வருடத்திற்கு 15 ம் கோரி நடைபெறும் கட்டுப்பாடான போராட்டத்தை ஒடுக்குவதற்கு, மிராசுதாரர்கள் சங்க ஊழியர் நால்வரை வேலையிலிருந்து நீக்கினர் இவர்களை மீண்டும் வேலைக்கெடுத்துக் கொள்ளவேண்டும், என்றும் அறப்போர் வலுவடைந்து வருகிறது.

விவசாயத் தொழிலாளரைப் பட்டினிபால் வாட்ட விடுவதில்லையென்று கரூர் வட்டாரத் தொழிற்சங்கங்களைச் சேர்ந்தவர்கள் உணவு தானியங்களுடன் ஊர்வலமாக கோஷமிட்டுக் கொண்டு செப். 25-ல் தும்பிவாடிக்கு வந்தனர்.

மிராசுதாரர்களின் குடும்பம் மட்டும் வயலில் இறங்கி வேலை செய்து போராடும் விவசாய வீரர்களை சோர்வடையச் செய்து பணியச் செய்யும் முயற்சியும் தோல்வி அடைந்தது.

இதனால் ஆத்திரமடைந்த மிராசுதாரர்கள் சின்ன தாராபுரம் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரின் துணை நாட, அவர் உடனே தும்பிவாடிக்கு விரைந்து, விவசாய சங்கத் தலைவர்களான சி. சோளியப்பன், மு. சிலம்பணன், (கரூர் இணைப் பஞ்சாயத் தலைவர்) பி. பொன்னுசாமி. (புன்னம் பஞ்சாயத் தலைவர்), எஸ். ராமசாமி (தும்பிவாடி வி. தொ. ச. காரியதரிசி), முனிசாமி, சாமியப்ப கவுண்டர், கந்தசாமி ஆகியோரைத் தக்க காரணமின்றி கைது செய்துள்ளார்

இந்தப் போலீஸ்-மிராசுதார் கூட்டுறவை எதிர்த்துக் கண்டன ஊர்வலம் நடைபெற்றது செப், 25ல் தும்பிவாடியில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் சோழ. உடையவர் (எம் எ.) கே. ஆர். பசுபதி மற்றும் பலர் அமைதியான போராட்டத்தை உடைக்கப் போலீஸ், மிராசுதாருக்குத் துணை போவதைக் கண்டித்துச் சொற்பொழிவாற்றினர். கண்டனத் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

## வானமண்டல நிலயம்

### சந்திரனுக்கு 4375 மைலில் சென்றது

மாஸ்கோ, அக் 6—

சந்திரனைச் சுற்றிவரும் 3வது சோவியத் ராக்கெட் (வானமண்டல நிலயம்) இன்றிரவு 7-46 மணிக்குச் சந்திரனுக்கு மிக அருகாமையில் சென்றது என்று சோவியத் செய்தி ஸ்தாபனம் டாஸ் அறிவித்தது. சந்திரனுக்கு 4375 மைல் தொலைவில் அந்த வானமண்டல நிலயம் சென்றது

அந்த நிலயம் சந்திரனைச் சுற்றி வந்துகொண்டே இருக்கிறதென்றும் அந்த ஸ்தாபனம் அறிவித்தது

வானமண்டல நிலயம் சந்திரனை மேலும் நெருங்கிக் கொண்டிருக்கிறது.

அந்த வானமண்டல நிலயத்திலுள்ள கருவிகள் இன்றும் நன்றாக இயங்கிக்கொண்டிருக்கின்றன என்று டாஸ் அறிவிக்கிறது (ராய்ட்டர்)

## கராச்சியில் பர்மியப் பிரதமர்

### அயூப்கானுடன் சம்பாஷணை

கராச்சி, அக் 6—

பர்மா பிரதமர் ஜெனரல் நீவின் ஐக்கிய அரபுக் குடியரசின் தலைநகரான கெய்ரோவிலிருந்து இன்று மாலை இங்கு வந்து சேர்ந்தார்.

ஜெனரல் நீவினும், பாகிஸ்தான் ஜனாதிபதி அயூப்கானும் சந்தித்துப் பேசினர். பாகிஸ்தான் — பர்மா உறவுகள்பற்றி நாளைக்கும் தொடர்ந்து பேச்சு நடக்கும். (பி. டி. ஐ.)

## அஜய்கோஷ் மா சே-துங் சந்திப்பு

லண்டன், அக். 6—

சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் மா சே-துங், உப தலைவர் லியூ ஷோ-சியும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்காரியதரிசி தோழர் அஜய்கோஷையும் சீனக் குடியரசின் 10வது ஆண்டு விழாக் கொண்டாட்டங்களில் கலந்து கொள்வதற்காக பீகிங்குக்கு வந்துள்ள இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சித் தூதுக்குழுவின் இதர உறுப்பினர்களையும் இன்று பீகிங்கில் சந்தித்துப் பேசினர், என்று நவசீனச் செய்தி ஸ்தாபனம் பீகிங்கிலிருந்து அறிவித்தது.

## இந்திய உபஜனாதிபதி

மதுரை அக். 7—

இந்திய உப ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், காந்தி கிராமத்திற்குச் செல்லும் வழியில் விமான மூலம் இன்று இங்கு வந்து சேர்ந்தார்.

விமான நிலயத்தில் பொது மராமத்து மந்திரி திரு. கக்கன், திருமதி சௌந்திரம் ராமச்சந்திரன், இதர அதிகாரிகள் ஆகியோர் அவரை வரவேற்றனர்.

## ஜனசக்தி அறிவிப்பு

### வாசக அன்பர்களுக்கு

ஜனசக்தி அச்செழுத்துக்கள் படிக்க முடியாத வகையில் தேய்ந்துவிட்டன. உடனே மாற்றவேண்டும் என்று கோரி வாசக அன்பர்களில் பலர் கொஞ்சகாலமாக கடிதங்கள் எழுதி வருகிறார்கள்.

பல கஷ்டங்களுக்கிடையே 'ஜனசக்தி' பணியாற்றி வருகிறது என்பதும் நினைத்த மாத்திரத்தில் வேண்டியதைச் செய்து முடிக்கும் நிலைமையில் 'ஜனசக்தி'யின் வருவாய் இனங்கள் இல்லை என்பதும் வாசகர்களுக்குத் தெரிந்த உண்மைகளே.

ஆயினும் கஷ்டங்களைச் சமாளித்துக்கொண்டு ஆவன எல்லாம் செய்து வருகிறோம். இன்னும் ஒரு வார காலத்திற்குள் அச்செழுத்துக்கள் புதுப்பிக்கப்பட்டுவிடும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இதுகாறும் தேய்ந்த எழுத்துக் காரணமாக சிரமத்திற்காளான வாசகர்களைப் பொறுத்தருளுமாறு வேண்டுகிறோம்.

— ஆசிரியர்.

ஜனசக்தி

சென்னை 8-10-1959

# ஜெர்மன் ஜனநாயக குடியரசு வாழ்க!

அக்டோபர் 7ம் தேதியன்று ஜெர்மன் ஜனநாயக குடியரசின் 10வது ஆண்டு நிறைவுறுகிறது. இவ்வைபவம், ஜெர்மன் ஜனநாயக குடியரசின் மக்களுக்கு மட்டுமன்றி எல்லா ஜெர்மானியருக்கும் அதோடு ஐரோப்பாவில் வாழும் மக்களுக்கும் உலக மக்களுக்கும் மகிழ்ச்சி தரும் விழாவாகும்.

இந்த கிழக்கு ஜெர்மனியில் இரு தடவை உலகத்தைப் போருக்கு இலக்காக்கிய தளபதிகள், பெரும் தொழில் அதிபர்கள், நிலப்பிரபுக்கள் அடியோடு வேரறுக்கப்பட்டனர்.

ஆரம்பத்தில் ஜெர்மன் ஜனநாயக குடியரசின் பொருளாதாரம் உருக்குலைந்திருந்தது. அக்குடியரசு சோவியத் யூனியனின் உதவியுடன் தீவிர சுய முயற்சிகளால் தலை தூக்கியது. ஊறுகளும் இருந்தன. மேலை நாடுகள் பல தடைகள் விதித்தன. அப்படியிருந்தும் கிழக்கு ஜெர்மனி விடா முயற்சியால் சுபிட்ச நிலையை அடைந்தது. தொழில் உற்பத்தியில் கிழக்கு ஜெர்மனி இப்பொழுது ஐரோப்பிய நாடுகளிலே ஐந்தாவது ஸ்தானத்தை வகிக்கிறது. வேலையில்லாத் திண்டாட்டம் அடியோடு ஒழிந்து விட்டது. வாழ்க்கைத் தரமும் உயர்ந்திருக்கிறது.

சமாதானம், நட்புறவு கொள்கை துவக்கம் முதல் கிழக்கு ஜெர்மனியானது எல்லா நாட்டினருடனும் நட்பும் சமாதானமும் கொண்டிருக்கிறது. ஐரோப்பாவில் நெருக்கடி தணிய வேண்டுமென்பதையும் அணுசக்தி தளவாட சூன்ய மண்டலம் அமைக்க வேண்டுமென்பதையும் ஜெர்மனியிலிருந்து அன்னிய துருப்புகள் வெளியேற்றப்பட வேண்டுமென்பதையும் இரு ஜெர்மனிகளிலும் படைகள் குறைக்க வேண்டுமென்பதையும் மேற்கு பெர்லின் சுதந்திர நகரமாக வேண்டுமென்பதையும் கிழக்கு ஜெர்மன் குடியரசு எப்பொழுதும் ஆதரித்து வருகிறது.

சென்ற காலத்தில் ஜெர்மன் ராணுவ வெறியர்கள் கையில் அதிக இன்னல்களுக்கு இலக்கான போலந்து செக்கோஸ்லோவேகியா முதலிய நாடுகளுடன் ஜெர்மன் ஜனநாயக குடியரசு நல்லுறவு கொண்டிருக்கிறது.

சமாதானம் வாய்த்த போதும் சமீபத்தில் ஜினீவாவில் நடந்த அயல்நாட்டு விவகார மந்திரிகள் மகாநாட்டிலும் சமாதானத்தையும் ஜெர்மன் ஐக்கியத்தையும் வற்புறுத்தி கிழக்கு ஜெர்மனி திட்டங்களைச் சமர்ப்பித்தது. இரு ஜெர்மனிகளும் ஒரு சமஷ்டி அமைப்பின் கீழ் ஐக்கியப்பட வேண்டுமென்றும் ஜெர்மன் ஜனநாயக குடியரசு வற்புறுத்துகிறது. ஆனால் மேற்கு ஜெர்மனியின் ராணுவ வெறியர்களும் புதிய நாஜிகளும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் உதவியுடன், பேச்சுவார்த்தை நடத்த மறுத்து, ஆக்ரமிப்பு திட்டங்களில் தீவிரமாக ஈடுபட்டு வருகின்றனர்.

மார்க்ஸிஸ்ட்-லெனினிஸ்ட் சோஷலிஸ்ட் ஐக்கிய கட்சியே ஜெர்மன் ஜனநாயக குடியரசு மக்களுக்கு தலைமை தாங்கி வருகிறது. வில்ஹெம் பீக், ஆட்டோ குரோட்வால், வால்டர் யுல்பிரிட் முதலிய தலைவர்கள் ஜெர்மன் ஜனநாயக குடியரசை சமாதான பாதையிலும் சோஷலிஸ புனருத்தாரண பாதையிலும் முன்னேற வழி காட்டிகளாக விளங்கி இருக்கின்றனர்.

ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு இந்தியாவின் நேசநாடு. பஞ்சசீலத்தில் நம்பிக்கையுள்ள நாடு. ஆசிய-ஆப்பிரிக்க மக்களின் விடுதலைக்கு ஆதரவு தரும் நாடு; மேற்கு ஜெர்மனியின் ஏகாதிபத்தியவாதிகள் பிற நாடுகளை ஆக்கிரமிக்கும் போக்குகளை வன்மையாக எதிர்க்கும் நாடு. இதுவரையிலும் ஜெர்மனியிலிருந்து வந்த அரசாங்கங்களைப் போலல்லாமல், கிழக்கு ஜெர்மனியில் மலர்ந்த இந்த சோஷலிஸ அரசு உலகிலுள்ள எல்லா நாடுகளையும் உண்மையான நேசப் பார்வையுடன் அணுகுகிறது. இது தான் இரண்டு உலக யுத்தங்களைத் துவக்கி வைத்த ஜெர்மனியின் ஒரு பகுதியில் நாம் காணும் புதுமை.

இந்திய மக்களை அது எவ்வளவு தூரம் நேச உறவுடன் பார்க்கிறது என்பதற்கு கிழக்கு ஜெர்மனியுடன் இந்தியா செய்து கொண்டுள்ள வியாபார ஒப்பந்தமே ஒரு உதாரணம். அன்றாட உபயோகப் பொருள்கள் மட்டுமல்ல, நமது பிரதான தொழில்கள் வளருவதற்கு நேரடியாக உதவுகிறது.

மேற்கத்திய நாடுகளிடம் நாம் வர்த்தகம் நடத்தினால் அவர்களுக்கு நாணயமாகவே கொடுக்க வேண்டும். ஆனால் ஜெர்மன் ஜனநாயகக் குடியரசுடன் வர்த்தகம் செய்யும் போது நமது ரூபாய் நாணயம் மூலமே கொடுத்தால் அவர்கள் வாங்கிக் கொள்கிறார்கள். அதன் பொருள் நாம் தரும் ரூபாயைக் கொண்டு நமது நாட்டிலேயே இங்கு நிலவும் விலையில் பொருள்களை வாங்கிக் கொள்ள அவர்கள் தயாராக இருக்கிறார்கள் என்பது. இவ்வாறு செய்வதன் மூலம் அன்னியச் செலாவணி நெருக்கடி என்பதே ஏற்படாது. சமீபத்தில் கச்சா பிலிம் நெருக்கடி ஏற்பட்ட போது இதே முறையில் ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு இந்தியாவுக்கு உதவி செய்தது.

இத்தகைய பரஸ்பர உதவி மனப்பான்மையுடன் நடந்து கொள்ளும் சோஷலிஸ நாடே ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு.

இக்குடியரசு நிலைத்து பலமடைந்து வளர்ந்தோங்குவது ஜெர்மனியிலுள்ள பாஸிஸ்டுக் கும்பல்களை அழித்தொழிப்பதுடன் உலக சமாதானம் வளரவும் பேருதவியாகும்.

வாழ்க ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு.

# மதுரைக்குப் பல்கலைக் கழகம் வேண்டும்

## புலவர் குழு தீர்மானம்

மதுரை, அக். 4—

தமிழகப் புலவர் குழுவின் மூன்றாவது கூட்டம் மதுரைத் தமிழ்ச் சங்கக் கட்டிடத்தில் கூடியது. கூட்டத்திற்கு திரு. எஸ். சோமசுந்தர பாரதியார் தலைமை வகித்தார்.

மதுரையில் ஒரு பல்கலைக் கழகம் அமைக்க வேண்டுமென்று சென்னை அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானமொன்று கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பட்டங்களை ஆராய்ச்சிக்குப் பதிவு செய்து கொள்வதில் சென்னைப் பல்கலைக் கழகம் வழங்கும் பட்டங்களுக்குச் சமமாக மதிக்க வேண்டுமென்றும் வித்துவான், புலவர் பட்டம் பெற்றவர்களுக்கும் [illegible] வழங்கப்பட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மேலும், அஞ்சல் தலைகளில் வள்ளுவர் உருவம் பொறிக்கப்பட்டிருப்பதற்குப் பாராட்டு தெரிவிக்கப்பட்டது.

கூட்டத்தில் நாவலர் சோமசுந்தர பாரதியாருக்கு பாராட்டுத் தெரிவிக்கப்பட்டது. பாராட்டுரையைத் தமிழ்ப் புலவர் குழு சார்பில் [illegible] வாசித்து பாரதியாரிடம் வழங்கினார்கள்.

பல புலவர்கள் பாரதியாரைப் பாராட்டிப் பேசினார்கள்.

# சோவியத் அமெரிக்க நல்லுறவு

# அமெரிக்கர்களுக்கு குருஷ்சேவ் வேண்டுகோள்

**“இராணுவ ஆயுதத் தளவாடக் கையிருப்புகளை மீண்டும் உருக்கி உருக்காக்குவதற்காக, அவற்றை உருக்கு ஆலைகளுக்கு அனுப்ப வேண்டாமா? டாங்கிகளை டிராக்டர்களாகவும், துப்பாக்கிகளைப் போரடிக்கும் கருவிகளாகவும் மாற்றுவதற்கு நாம் முற்பட வேண்டாமா? அணுவின் சக்தி பூராவையும் சமாதானக் காரியங்களுக்காகப் பயன்படுத்த இனியும் நாம் தாமதிக்கலாமா?” என்று சோவியத் பிரதமர் நிகிதா குருஷ்சேவ் செப். 24-ல் பிட்ஸ்பர்க்கில் பேசுகையில் அமெரிக்க மக்களைக் கேட்டார்.**

பிட்ஸ்பர்க்கில் வணிகர் பொது மக்கள் பிரதிநிதிகளின் கூட்டம் ஒன்றில் பேசுகையில், மேற்கண்ட கேள்விகளைக் கேட்டதுடன் [illegible]

சோவியத் யூனியனும் அமெரிக்காவும் சமாதானமாக வாழத் தயாராக உள்ளது என்று குருஷ்சேவ் அறிவித்தார். “நமது இரு நாட்டு மக்களும் மாறுபட்ட முறையில் வாழ்க்கை முறைகளையும் பழக்க வழக்கங்களையும் கொண்டிருக்கின்றனர். ஒரே வானத்தின் கீழ் வாழ வேண்டியவர்களே” என்றார் குருஷ்சேவ். “உங்கள் மக்களும் சரி, எங்கள் மக்களும் சரி, யுத்தத்தை விரும்பவில்லை. எனவே நாம் அண்டை நாடுகளுக்குரிய நல்லுறவு கொண்டு வாழவேண்டும்! சமாதான சகவாழ்வுக் கோட்பாட்டின் அடிப்படையில் நமது உறவுகளை நாம் அமைத்துக் கொள்ளலாமா? இதனால் எவருக்கும் எவ்வித சேதமோ நஷ்டமோ ஏற்படுவதில்லை—மாறாக, எல்லோருக்கும் நன்மை உண்டு” என்று குருஷ்சேவ் மேலும் கூறினார்.

## நல்லதொரு ஆரம்பம்

உச்ச கட்டத்தில் பரஸ்பர விஜயங்கள் தொடங்கியுள்ளதானது நல்லதொரு ஆரம்பமாகும் என்றார் நிகிதா குருஷ்சேவ். எனது அமெரிக்க விஜயமும், இதை அடுத்து அமெரிக்க ஜனாதிபதி சோவியத் யூனியனுக்கு வருவதும், நாம் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொள்ள உதவும், நம்மிடையே ஒத்துழைப்புப் பாதை காண உதவும் என்று நாங்கள் திடமாக நம்புகிறோம் என்றார் அவர்.

அமெரிக்காவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையே [illegible]

அவர்கள் அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருக்கும்போது, [illegible] சமாதானத்தை நிறுவுவதற்காக [illegible]

“முகாந்திரம் ஏதுமில்லாத அபத்தம்”

[illegible]

“நாங்கள் தயார்”

“இப்பொழுது இசனோவர் [illegible]

[illegible]

நிக்சனிடம் கூறியது

உபஜனாதிபதி ரிச்சர்டு நிக்சன் [illegible] “கம்யூனிஸத்தின் அடிமைகளுடைய” [illegible]

# ரஷ்ய உதவியுடன் கனயந்திர தொழிற்சாலை

ராஞ்சி, அக். 5—

இங்கு ஹதியா என்னுமிடத்தில் நிறுவப்படவிருக்கும் கனயந்திரத் தொழிற்சாலைக்கான திட்டத்தைத் தயாரிப்பதற்காக 14 ரஷ்ய நிபுணர்கள் வந்து தொழிற்சாலை நிறுவ உத்தேசித்துள்ள இடத்தைப் பார்வையிட்டனர். பீஹார் சர்க்கார் அதிகாரிகளுடன் பேச்சுவார்த்தைகள் நடத்துகிறார்கள்.

ரஷ்ய உதவியுடன் இங்கு கனயந்திரத் தொழிற்சாலை நிறுவப்படும். செக்கோஸ்லோவேகியா ஒரு உலை நிறுவ உதவி புரியும். இதற்கு மொத்தமாக 200 கோடி ரூபாய் செலவாகும்.

# பிராணிகளை இம்சித்தால் சிறைத் தண்டனை தர யோசனை

ரோம், அக். 4—

பிராணிகளை இம்சிப்பவர்களுக்கு அதிகபட்சம் இரண்டாண்டு சிறைவாசத் தண்டனை அளிக்க வேண்டுமென்றும் [illegible] யோசனை [illegible] 24 தேசங்களின் பிரதிநிதிகள் கலந்துகொண்டார்கள். [illegible] பிலவக்கப்படுமாம்.

இருக்கிறேன்; முன்பு நான் தமாஷாகக் கூறியதை இங்கும் கூற விரும்புகிறேன்; நீங்கள் வித்தியாசமாக நினைக்கக் கூடாது என்றார் குருஷ்சேவ். முதலாளித்துவத்தின் அடிமைகளுடைய வாழ்க்கை நிலைமைகளை நேரில் பார்ப்பதற்காக வந்திருக்கிறேன் என்று கூற விரும்புகிறேன். நீங்கள் மோசமான நிலைமைகளில் வாழவில்லை என்பதைக் காண்கிறேன். ஆனால் நாங்களும் மோசமான நிலைமைகளில் வாழவில்லை, வளமாகவே வாழுகிறோம். இன்னும்கூட வசதியாக வாழ வேண்டுமென விரும்புகிறோம். நாங்கள் எங்களுக்காகவும், எங்கள் நாட்டிற்காகவும் பாடுபடுவோம். உங்களை எட்டிப் பிடித்து தாண்டிச் சென்று விடுவோம் என்ற உறுதியான நம்பிக்கை எங்களுக்கு உண்டு.

## இணைந்து கைகோர்த்துச் செல்வோம்

சோவியத் நாட்டின் செல்வங்கள் எந்த தேசத்திற்கும் தீங்கான முறையில் ஒருபோதும் உபயோகிக்கப் படாதென்று குருஷ்சேவ் வலியுறுத்தினார். சமாதானத்தின் நலனை உத்தேசித்து நாங்கள் உங்களுடனும், எல்லா மக்களுடனும் இணைந்து கைகோர்த்துச் செல்வோம்.

மேலும் பேசுகையில் குருஷ்சேவ் கூறினர்: சமூக அமைப்பு பற்றிய மாறுபட்ட கருத்துக்கள் நமது ஒத்துழைப்பிற்கு முட்டுக்கட்டையாக அமைய வேண்டியதில்லை. நீங்கள் முதலாளித்துவத்தை விரும்புகிறீர்கள். சரி—கடவுள் உங்களுக்கு அருள் புரிவதாக — முதலாளித்துவ அமைப்பிலேயே நீங்கள் வாழுங்கள். பழைய குதிரைமீதே தொடர்ந்து சவாரி செய்யுங்கள். ஆனால் நாங்கள் ஒரு புதிய குதிரைமீது, சோஷலிசக் குதிரைமீது சவாரி செய்கிறோம். ஆகவே நாங்கள் ஓரளவு சுலபமாகவே உங்களை எட்டிப்பிடித்து தாண்டிச் சென்று விடுவோம். ஆனால் இது இருவேறு அமைப்புகளிடையே நடைபெறும் பொருளாதாரப் போட்டியைத் தான் குறிக்கிறது. சமாதான பூர்வமான போட்டியை நாம் மேற்கொள்வோமாயின், எல்லா மக்களுமே வெற்றியாளர்களாக முடியும். ஏனெனில் அரசுகளுக்கிடையே யுத்தம் ஏற்படாது, மனித இரத்தம் பெருக்கெடுத்து ஓடாது.

அமெரிக்க மக்கள் ஏகோபித்த முறையில் அமெரிக்க சர்க்காரின் கொள்கையை ஆதரிக்கிறார்கள் என்றும், குடியரசுக் கட்சியும் ஜனநாயகக் கட்சியும் [illegible] பிரதிநிதி என்றார் குருஷ்சேவ். சோவியத் மக்கள் அவர்களுடைய சர்க்காரிடமும், சோவியத் சர்க்காரின் அதிபராகவும் சோவியத் யூனியனின், சோவியத் மக்களின் பிரதிநிதியாகவும் இங்கு வந்துள்ள என்னிடமும் கொண்டுள்ள நம்பிக்கைக்காகவும் மதிப்பிற்காகவும் நன்றி செலுத்துகிறேன்.

இந்நிலைமைகளிலே இருதரப்பினருக்கும் உகந்த முடிவுகளை அதாவது சோவியத் மக்களும் அமெரிக்க மக்களும் ஒருங்கே ஏற்றுக்கொள்ளக்கூடிய தீர்மானங்களை வந்தடைவது சுலபமாயிருக்கும் என்றார் குருஷ்சேவ். மக்களிடையே ஒற்றுமை இல்லையெனில், அரசாங்க அதிபரை மக்கள் ஆதரிக்கவில்லையெனில், அந்த அதிபரால் தக்க முடிவுக்கு வர இயலாது.

நமது இரு நாடுகளும் ஒன்றின்பால் ஒன்று அவநம்பிக்கை கொண்டிருப்பதற்குப் பதிலாக நன்னம்பிக்கைக்குரிய உறவுகளை அமைத்துக்கொண்டு தமக்காகவும் உலக மக்கள் அனைவருக்காகவும் சமாதானத்தை வலிமையுறச் செய்வதற்கான போராட்டத்தில் தமது முயற்சிகளை ஒன்று சேர்த்திட்டால், அகில உலகின் மக்கள் எல்லோரும் நம்மை ஆதரிப்பார்கள் என்று கூறி, நிகிதா குருஷ்சேவ் தனது உரையை முடித்துக் கொண்டார்.

—டாஸ்.

# கத்தோலிக்கத் தலைமையில் பீதி!

மூணாறு, அக். 2—

தேவாலயங்கள் அரசியல் சூதாட்டத்திற்கு பயன்படும் சூதாட்டக் கூடமாக ஆகக் கூடாது! தெய்வ வழிபாட்டிலேயும் மற்ற எல்லாவற்றிலும் உள்ளவனென்றும் இல்லாதவனென்றும் வேறுபாடு கூடாது, ஏழையென்றும் பணக்காரனென்றும் வித்தியாசம் கூடாது. ஆலயத்தின் பலிபீடங்கள் கட்சிப் பிரச்சாரத்திற்கு பயன்படுத்தப்பட்டு அசுத்தப்படுத்தப்பட அனுமதிக்கக்கூடாது, என இன்று கேரளம் முழுவதும் கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் கொதித்தெழுந்துள்ளனர். கேரளமெங்கும் இதே தொனியில் ‘கத்தோலிக்க லீக்’ உருவாகி வருகிறது. ஒவ்வொரு சிறு சிறு பகுதியிலும் முதிர்ந்த கத்தோலிக்கர்கள் இந்த அணியின் முன்னணி வீரர்களாக எழுந்துள்ளனர். இவ்விதத்தில் ‘கத்தோலிக்க லீக்’ வளர்ந்து உயர்ந்து வருவதைக் கண்டு கேரளக் கத்தோலிக்கத் தலைமைக்கு பெரும் பீதி ஏற்பட்டுள்ளது.

# நாடும் நடப்பும்

## ராக்கெட் யுகத்தில் காமராஜர்!

மேற்கு வங்க உணவுப் போராட்டம் தீவிரமடைந்த பொழுது, கம்யூனிஸ்டுகள் சீனாவின் ஏஜண்டுகள்’ என்று கதை கட்டிவிட்டு, மக்களின் கவனத்தைத் திருப்ப முயன்றார்கள் பாவம்! அவர்கள் ஜம்பம் பலிக்காது போய்விட்டது. பீகார் உணவுப் போராட்டத்தை நசுக்குவதற்கும் இதே பல்லவியைத் தான் பாடிப் பார்த்தார்கள். கேட்பதற்கு ஆளில்லாமல் போய்விட்டது. பத்திரிகை படிப்பவர்களுக்கு சாதாரணமாக இந்த விஷயங்களெல்லாம் தெரிந்திருக்கும்.

ஆனால் காமராஜருக்கு இந்த விஷயங்களெல்லாம் தெரியவில்லையென்பது இப்பொழுது தான் தெரிகிறது! தமிழகம் இன்னும் மேற்கு வங்கமாக உருவெடுக்கவில்லை; பீகாராக மாறவில்லை. காட்டுமன்னார்குடிக்கு காமராஜர் சென்றபொழுது, மக்கள் கருப்புக்கொடிதான் பிடித்தார்கள். விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்து’ ‘நியாயவிலைக் கடைகள் திற’ ‘படி அரிசி 12 அணுவிற்கு கொடு’ என்றுதான் கோஷம் முழக்கினார்கள். மக்களைப் பாதுகாக்கவேண்டிய மந்திரியார் பட்டினிபோட்டு விட்டாரே என்பதை நினைவுபடுத்தத்தான் கருப்புக்கொடி பிடித்தார்கள்.

காமராஜருக்குக் கடுங்கோபம் வந்துவிட்டது. பொதுக்கூட்டத்தில் பேசுகையில் கோஷங்களாக முழங்கிய மக்கள் கோரிக்கைகளுக்கு “பார்க்கலாம்” என்று தனக்கே உரிய தனிப்பாணியில் பதிலளிக்கவில்லை. கம்யூனிஸ்டுகள்மீது பாய்ந்திருக்கிறார். கம்யூனிஸ்டுகள் அன்னிய நாட்டிற்குத்தான் விசுவாசமாக இருப்பார்களாம்! எனவே அவர்கள் இந்த நாட்டைப் பற்றியோ, நாட்டு மக்களைப் பற்றியோ கவலைப்பட மாட்டார்களாம். ‘விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்து’ என்று கம்யூனிஸ்டுகள் கோருவது இந்த நாட்டு மக்களின் நலனைக் கருதியா அல்லது வேற்று நாட்டுமக்களின் நலனைக் கருதியா? படி அரிசி 12 அணுவிற்குக் கொடு என்று கேட்பது சோவியத் யூனியன் மக்களுக்கா அல்லது இந்த நாட்டு மக்களுக்கா? நியாயவிலைக் கடைகள் திற என்று கூறுவது தமிழகத்திலா அல்லது சீனத்திலா? நாற்றமில்லாத நல்ல அரிசி கொடு என்பது இந்நாள் வயிற்றுக்கொடுமைக்காரர்களுக்கா அல்லது வாழ்வில் செம்மையைக் கண்ட சோவியத் மக்களுக்கா? கம்யூனிஸ்டுப் பூச்சாண்டி காட்டி மக்களை திசை திருப்பிய காலம் மலையேறி விட்டது, இது ராக்கெட் யுகம் என்பது நமது முதன் மந்திரியாருக்குத் தெரியாதிருப்பதற்காக நாம்தான் வருத்தப்பட வேண்டும். ஏனெனில் ‘உழுபவனுக்கு நிலம் சொந்தம்’ என்று அன்று நாம் கோஷித்தபொழுது, வெளுப்பவனுக்கு வேட்டி சொந்தம் என்று கூவியவர் தானே நமதருமை முதலமைச்சர்!

★

## தேசபக்த அளவுகோல்!

காங்கிரஸ் மந்திரிகளுக்குப் பிற கட்சிகள் காங்கிரசே ஒருகாலத்தில் கையாண்ட முறையான கருப்புக்கொடி பிடித்தால் நாட்டுப் பற்றில்லாதவர்களாகப் போய்விடுகிறார்கள். ஆனால் அதே நேரத்தில் காங்கிரஸ் அல்லாத மந்திரிகளின் முன்னால் செருப்பையும், விளக்கமாற்றையும் பிடித்தார்கள். காங்கிரஸ்காரர்கள் ஆடினார்கள். இவர்கள் நாட்டுப் பற்றுள்ளவர்கள்! ஜனநாயகவாதிகள்!

நாட்டுப் பற்றுக்கு காங்கிரஸ் மந்திரிகள் கூறுவதுதான் ஒரிஜினல் அளவுகோல் போலும். கேரளாவின் ஜனவிரோதக் கொள்கையை எதிர்த்துப் பேசினால் நாட்டுப்பற்றில்லாதவர். காங்கிரஸ் கூறும் திட்டங்களுக்கெல்லாம் ‘ஆமாம் சாமி’ போடாதவர்கள் நாட்டுப் பற்றில்லாதவர்கள். உணவு கொடு என்று கேட்பவர்கள் தேசவிரோதிகள்! இந்த நியாயத்தை எந்த நீதிபதி பீடம் கூறுவது?

★

## ஆவடி சோஷலிச மகிமை!

காங்கிரஸ் ஆவடி சோஷலிசத்தின் மகிமையைப்பற்றி என்னவென்று சொல்லுவது? நிலச் சீர்திருத்தமே கொண்டுவரக் கூடாது என்று நூறு காங்கிரஸ் பார்லிமெண்ட் உறுப்பினர்கள் கையெழுத்திட்டு, உலகுக்குப் பறையறைந்தார்கள்! நிலச் சீர்திருத்தம் கொண்டுவந்த கேரள அரசை நீக்குவதற்குத் தலைகீழாக நின்றார்கள். கேரள நிலச் சீர்திருத்த மசோதாவிற்கு ‘காங்கிரஸ் தீர்மானவாதிகள்’ ஆயிரத்திற்கு மேற்பட்ட திருத்தங்கள் கொண்டு வந்தார்கள். எனினும் கேரள விவசாய உறவு மசோதா நிறைவேறி, குடியரசுத் தலைவரின் கையெழுத்திற்காகக் காத்துக் கிடக்கிறது. எங்கே குடியரசுத் தலைவர் மசோதாவிற்கு ஒப்பம் தெரிவித்து விடுவாரோ என்று கேரள காங்கிரஸ்காரர்களும் தூக்கத்தை மறந்து, பதிலுக்குக் காத்துக்கிடக்கிறார்கள்.

கேரள காங்கிரஸ் விவசாய சங்கம் மசோதா சட்டமாக வேண்டுமென்று தீர்மானம் போடுகிறது. ஆனால் கேரள மாநில காங்கிரஸ் கமிட்டி ‘கப் சிப்’ பென்று கைகட்டி, வாய் பொத்தி நிற்கிறது. நாராயணன் நம்பியார் என்ற பிரபல காங்கிரஸ் தலைவர் கேரள நிலப்பிரபுக்களை டில்லிக்கு அழைத்துப்போய் திட்டக் கமிஷன் முன்னும், மந்திரிகள் முன்னும் கண்ணீர் வடிக்கிறார். கம்யூனிஸ்டுகள் கொண்டு வந்த விவசாய உறவு மசோதா நிறைவேறினால் குடியே முழுகிப் போகும் என்று கண்ணைக் கசக்குகிறார்கள் காங்கிரஸ் நிலப்பிரபுக்கள். கலைக்கப்பட்ட சட்டமன்றத்தில் காங்கிரஸ் உறுப்பினராக இருந்த ஒருவர் குட்டநாடு நிலப்பிரபுக்களைத் திரட்டி, கேரள கவர்னரிடம் “அபயம் அபயம்” என்று அடைக்கலம் புகுந்தார்! கோழிக்கோடு நகர மன்றத்தில் விவசாய உறவு மசோதாவிற்கு ஜனாதிபதி விரைவில் அங்கீகாரம் அளிக்க வேண்டும் என்று தீர்மானம் வந்தது. அதனை எதிர்த்து காங்கிரஸ்காரர்கள் தோற்கடித்தே விட்டார்கள், மாஜி மந்திரி மாதவமேனன் மசோதா திருத்தப்பட வேண்டும் என்கிறார். நிறைவேறிய மசோதாவை திருத்த குடியரசுத் தலைவராலும் கூட முடியாது என்பது அவருக்குத் தெரியாததற்காக என்ன செய்வது? இதுதான் ஆவடி சோஷலிச மகிமை!

—துருவன்

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

## உடனே அரசாங்கம் கவனிக்குமா?

ஐயா,

கடந்த இரண்டு மாதமாக ராணிப்பேட்டை செக் போஸ்டில் பணியாற்றும் தணிக்கை அதிகாரி மீது சென்னை ராஜ்ய லாரி உரிமையாளர்களும் டிரைவர்களும் அழுகும்பொருள் வியாபாரிகள் சங்கத் தலைவரும் புகார் செய்துள்ளனர். இவற்றை உடனே கவனிக்காமல் சர்க்காரின் காலதாமதம் செய்து வருவதால் ஏராளமான இன்னல்கள் ஏற்படுகின்றன. இதை உடனே அரசாங்கம் கவனிக்குமா?

பொதுஜனங்களுக்கு இடையூறு ஏற்படுகிறது. வியாபாரத்திற்கு பெருத்த நஷ்டம் ஏற்படுகிறது.

” லாரி உரிமையாளர் சங்கக் காரியதரிசி.

●

## இது பண்பல்ல!

ஐயா

3-10-59 தென்றலில், கேள்வி பதில் பகுதியில் — முல்லைக்காடு மு. நாராயணன் என்பவர் ஒரு ‘செய்தி’யைத் தெரிவித்து இருக்கிறார்:

“பாரதிதான் புரட்சிக் கவிஞன் பாரதிதாசன் ஒரு பிற்போக்குவாதி” என்று தோழர் ப. ஜீவானந்தம் அவர்கள் பேசினார்கள்:—

இந்தச் செய்திக்குக் கீழ்க் கண்ட வாசகங்களின் மூலம் தென்றல் ஆசிரியர் விடை இறுக்கிறார்:...

“புரட்சித் தத்துவத்தில் பாரதிதாசனுக்கு உரிய இடத்தை மறுப்பவர்கள், ஒன்று முட்டாள்களாக அல்லது அயோக்கியர்களாக இருக்கவேண்டும். நான் அறிந்த வரையில் தோழர் ஜீவானந்தம் அவர்கள் முட்டாள் அல்ல.”

தென்றல் ஆசிரியரின் இந்தப் பண்பற்ற பதிலைக் கண்டு, நான் பெரிதும் வருத்தம் அடைந்தேன். கருத்துக்களை குழப்பி கலகம் உண்டுபண்ணுவதல்ல பத்திரிகாசிரியனின் பணி. அவர் உண்மையின் நேர்வாரிசாக நடுநிலைமையினின்றும் மாறாதவனாக இருக்க வேண்டும்.

‘தாமரை’ அக்டோபர் இதழில் கவிஞர், உலகில் புரட்சிப் பரம்பரை’ என்ற கட்டுரையில், செந்தமிழ்ச் செல்வர் திரு. ஜீவா அவர்கள், தமது கருத்தைத் தெள்ளத் தெளிய விளக்கியுள்ளார். அதில்—பாரதியையும் பாரதிதாசனையும்—புரட்சிக் கருத்துக்களை அளவுகோலாகக் கொண்டு ஒப்பிட்டுப் பார்த்துத் தீர்ப்பு வழங்குவதற்குரிய ஓர் அறிய வழியை மக்கள் முன் சமர்ப்பித்திருக்கிறார்.

நடுநிலையாளர்களின் முன் இலக்கிய விமர்சகர்களின் முன் விரிந்து கிடக்கும் இந்தப் பாதையை வெறுத்துவிட்டுக் கண்ணதாசன் அவர்கள் குறுக்குவாட்டில் பாய்ந்து ஜீவா அவர்களைத் தாக்கமுனைவது தமிழ்ப் பண்பன்று.

இன்று தமிழகத்தில் பொதுப் பணியிலும், சரி-தமிழ்ப் பணியிலும் சரி-மூத்து முதிர்ந்து இளஞ் சமுதாயத்தின் சிறந்த வழிகாட்டியாய்த் திகழும் ஒரு தமிழ்ப் பெரியாரைப் பழிக்க முற்படுவது ஏன்?

உண்மை என்ன? திரு. கண்ணதாசன் அவர்கள், உண்மையில் பாரதி பரம்பரையைச் சேர்ந்தவரும் அல்லர்; பாரதிதாசன் பரம்பரையைச் சேர்ந்தவரும் அல்லர்.

பாரதிதாசனைப் பாடையில் வைக்க வேண்டுமென்றும் எலும்பை நொறுக்க வேண்டுமென்றும் அவர் பாடிய இழிசொற்கள் இன்னும் மறையவில்லை.

விமர்சன முறையில் ஆராய்ந்து, ஒவ்வொருவருக்கும் உரிய இடத்தைக் கொடுப்பதுதான் தமிழ்ப்பண்பு வேண்டுமென்றே இழித்துரைப்பது—என்ன பண்பு?

—தமிழ் ஒளி

●

## கம்யூனிஸ்ட் கட்சியே வெற்றிபெறும்

ஐயா,

20-9-59 ‘கல்கி’ இதழில் சுதந்திரா கட்சி கொள்கை விளக்கப்பட்டிருக்கிறது. ‘நில உச்ச வரம்பு வேண்டுமென்கிறது காங்கிரஸ். அதைக் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரிக்கிறது. கூட்டுறவு சாகுபடி வேண்டுமென்கிறது காங்கிரஸ் அதற்குத் தலை அசைக்கிறது கம்யூனிஸ்ட் கட்சி.” இன்னும் சில ஒற்றுமைகள் இருக்கின்றன என்றும் ஆகவே கம்யூனிஸ்டையும் காங்கிரஸையும் சேர்த்து எதிர்ப்பது சுதந்திர கட்சி என்றும் கல்கி கூறுகிறது.

தேர்தலில் போட்டியிட்டால் சுதந்திரா கட்சிக்குக் காங்கிரஸின் ஓட்டுகளே சிதறி, அவ்விதம் சிதறிய சிறு பாகமே கிடைக்கும். ஆக காங்கிரஸும் சுதந்திரா கட்சியும் வெற்றி அடையாமல், அவற்றை எதிர்த்து நிற்கும் செங்கொடிக்கே நிச்சயமாக வெற்றி கிடைக்குமென்பதை 1962 பொதுத்தேர்தல் காட்டப் போகிறது.

ஸ்ரீசைலம்
பிரம்பை

# பிரிட்டன்மீது ஐஸ்லந்து பிரதிநிதி குற்றச்சாட்டு

ஐக்கியநாடுகள், அக். 5—

ஒரு சிறிய நாடாகிய ஐஸ்லாந்தின் மீன் பிடிப்பு எல்லை உரிமை சம்பந்தமாக பிரிட்டன் இழிவான, பயமுறுத்தல் தந்திரங்களைக் கையாளுகிறது, என ஐஸ்லாந்தின் பிரதிநிதிக் குழுத் தலைவர் இன்று ஐ. நா. பொதுச் சபையில் பிரிட்டன்மீது குற்றம் சாட்டினார்.

சோவியத், அல்லது சீனக் கடற்கரையின் 12 மைல் எல்லைக்குள் செல்வதற்கு பயப்படும் பிரிட்டன், ஐஸ்லாந்து சிறிய நாடு என்ற காரணத்தினால், ஐஸ்லந்தின் எல்லையைப் புறக்கணிக்கிறதா, என்றும் அவர் கேட்டார்.

# உணவுக்காக ஒற்றுமை அணி வகுப்போம்

## பி. சோ. தலைவர் நேருவுடன் இரகசியப் பேச்சுகள்

### மகாராஷ்டிரத்தில் காங்கிரசுடன் பி. சோ. கூட்டுச் சேரும்!

### கம்யூனிஸ்டுகள்பற்றி அவதூறு

பம்பாய், அக். 6—

தற்பொழுது இருமொழி ராஜ்யமாயிருக்கின்ற பம்பாய் மாநிலம் மொழிவழியாகப் பிரிக்கப்பட்ட பின்னர், மகாராஷ்டிரத்தில் நிலையான ஆட்சி ஏற்படுவதற்கு காங்கிரஸ்கட்சியும் பிரஜா சோஷலிஸ்டுக் கட்சியும் கூட்டு முயற்சி எடுத்துக்கொள்ளும் என்று கூறப்படுகிறது.

பம்பாய்க்கு வருகை தந்துள்ள பிரதமர் நேருவை பி. சோ. கட்சிப் பிரமுகரும், சம்யுக்த மகாராஷ்டிர சமிதியில் அங்கம் வகித்தவருமான எஸ். எம். ஜோஷி நேற்று தனிமையில் சந்தித்துப் பேசினார். இவர்களது பேச்சுவார்த்தை ராஜபவனில் 40 நிமிடநேரம் ரகசியமாக நடைபெற்றது. இந்த ரகசியக் கூட்டத்தில் பம்பாய் மாநில முதலமைச்சர் சாவன் மட்டும் கலந்து கொண்டார்.

**காங்கிரசோடு ஒத்துழைக்கத் தயார்**

காங்கிரஸ், பி. சோ. கட்சிகளுக்குள் ஒரு பொதுவான திட்டம் ஏற்பட்டு விட்டால் பம்பாய் மாநிலம் பிரிக்கப்பட்டு விடும் என்றும், பேச்சுவார்த்தையில் உடன்பாடு ஏற்படும் வரையில் தள்ளிப்போட்டுக் கொண்டே போவார்கள் என்றும் தெரிகிறது.

பிரிந்து செல்லும் மகாராஷ்டிர மாநிலத்தில் நிலையான ஆட்சி ஏற்படுவதற்கும், அதன் முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் தாங்கள் காங்கிரஸ் கட்சியோடு ஒத்துழைக்கத் தயார் என்று ஜோஷி நேருவிடம் கூறியிருப்பதாகக் கூறப்படுகிறது. இவ்விஷயங்களில் தாங்கள் காங்கிரசோடு ஒத்துழைக்கத் தயங்க மாட்டோம் என்றும் ஜோஷி அழுத்தந்திருத்தமாகக் கூறினார். குஜராத்திலிருந்து மகாராஷ்டிரம் தனித்துச் செல்வதிலும் குறிப்பிட்ட கொள்கைகளின் அடிப்படையில் தாங்கள் காங்கிரசோடு ஒத்துழைக்கத் தயார் என்று மேலும் நேருக்கு வாக்குறுதி அளித்தார்.

**கம்யூனிஸ்டுகள் மீது நடவடிக்கையாம்!**

இந்திய ராணுவத்திலுள்ள உயர்தர அதிகாரிகளைப் பற்றி கம்யூனிஸ்டுகள் அவதூறு கூறிக் கொண்டிருப்பதாகவும், அவர்கள்மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் ஜோஷி நேருவைக் கேட்டுக் கொண்டாராம். சில உயர்தர ராணுவ அதிகாரிகள் மேற்கத்திய ஏகாதிபத்திய வாதிகளின் கருவிகளாக இருப்பதாகக் கம்யூனிஸ்டுகள் கூறுகிறார்களென்றும், ராணுவத்தில் பிளவுண்டு பண்ணவே அவ்வாறு கூறுகிறார்களென்றும் ஜோஷி நேருவிடம் கூறினார் என்று கூறப்படுகிறது.

பம்பாய் பி. சோ. கட்சி பிரமுகரான எஸ். எம். ஜோஷி சம்யுக்த மகாராஷ்டிர சமிதியிலிருந்து கம்யூனிஸ்டுகள் விலகிக் கொள்ள வேண்டுமென்று ஏற்கனவே கூறியது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம். தற்பொழுது சம்யுக்த மகாராஷ்டிர சமிதியிலிருந்து கம்யூனிஸ்டுக் கட்சியை விலக்கி விட்டு, பிற கட்சிகளையும் பி. சோ. கட்சியையும் சேர்த்து, காங்கிரசோடு கூட்டு அரசாங்கம் அமைப்பதில் ஜோஷி தீவிரமாக இருக்கிறார் என்று செய்தி கிடைத்திருக்கிறது.

## அச்சுத் தொழிலாளருக்கு சம்பளபோர்டு ஏற்படுத்துக

### சென்னை அச்சுத்தொழிலாளர் மகாநாட்டில் கோரிக்கை

சென்னை, அக். 5—

நேற்று சென்னை கோகலே மண்டபத்தில் நடைபெற்ற சென்னை அச்சுத் தொழிலாளர் மகாநாட்டில், அச்சுத்தொழிலாளர்களுக்கு உடனே சம்பள போர்டு ஏற்படுத்தக்கோரி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அத்தீர்மானம் கூறுவதாவது:

"தமிழ் நாட்டில் உள்ள 20,000 அச்சுத் தொழிலாளர்களுடைய வேலை நிலைமையும், சம்பள நிலைமையும் மிகவும் மோசமாக இருக்கிறது என்பதை மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் சென்னை சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவந்து அச்சுத் தொழிலிலுள்ள 'பீஸ் ரேட், காண்ட்ராக்ட், என்ஸ்' முறைகளை ஒழிக்கவேண்டுமென்றும் பல்வேறு தொழிற் பிரிவுகளில் வேலை செய்யும் அச்சுத் தொழிலாளர்களுக்கு நியாயமான சம்பளம் நிர்ணயிப்பதற்காக சம்பள போர்டு ஏற்படுத்த வேண்டுமென்றும் கோரி வருவதை சென்னை சர்க்கார் புறக்கணித்து வருவதை சென்னை அச்சுத் தொழிலாளர் 12-வது மகாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது.

"உடனடியாக அச்சு தொழிலாளர்களுக்கு சட்டபூர்வமாக சம்பள போர்டு ஏற்படுத்தவேண்டுமென்று இம் மகாநாடு சென்னை சர்க்காரை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது".

## விலைவாசி உயர்வை கண்டித்து இந்திய-சீன உறவை வற்புறுத்தி

### மாபெரும் சைக்கிள் ஊர்வலம்

சென்னை, அக். 5—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை வ. உ. சி. நகர் ஏரியாக் கமிட்டியின் சார்பில் நேற்று காலை 8 மணிக்கு பிராட்வே ஹார்பர் தொழிலாளர் சங்க அலுவலகத்திலிருந்து மிகப் பெரிய சைக்கிள் ஊர்வலம் தோழர் எம். பொறைக்கலம் தலைமையில் புறப்பட்டு, எல்லா வட்டங்களையும் சுற்றி வந்தது.

**கோஷமெழுப்பினர்**

வழியெல்லாம் அவர்கள் "காமராஜ் சர்க்காரே விலைவாசியைக் கட்டுப்படுத்து! படி அரிசி 12 அணாவுக்குக் கொடு! நாற்றமடித்த அரிசி வேண்டாம். 1600 குடும்பங்களுக்கு ஒரு நியாய விலைக் கடை திற! பதுக்கல்காரர்கள் மீது நடவடிக்கை எடு! நடவடிக்கை எடுக்கும் வரை போராடுவோம்! இந்திய-சீன நட்புறவு வாழ்க! பஞ்சசீலம் வாழ்க! எல்லைப் பிரச்சினையை சுமுகமாகத் தீர்ப்போம்! 65 கோடி சீன மக்களும் 40 கோடி இந்திய மக்களும் சகோதரர்களே! ஆசியாவில் ஏகாதிபத்யச் சதியை முறியடிப்போம்! கம்யூனிஸ்ட் கட்சி வாழ்க!" போன்ற கோஷங்களை எழுப்பிக்கொண்டு, எல்லா வட்டங்களையும் சுற்றிவந்தார்கள்.

**பொதுஜன ஆதரவு**

ஊர்வலத்தினரைக் கண்ட பொதுமக்கள் மிக்க உற்சாகமுற்றவர்களாய், ஆதரவு தந்ததுடன், பல இடங்களில் ஊர்வலத்தினருக்கு குளிர்ந்த பானம்

ஆரம்பத்தில் ஊர்வலத்தினர் கோகலே ஹாலில் நடந்து கொண்டிருந்த அச்சுத் தொழிலாளர் மகாநாட்டுக்குச் சென்று, கொடியேற்று விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

**போராடினால் தான்**

ஊர்வலம் முடிவில் ஜில்லா கவுன்சில் உறுப்பினர்கள் தோழர்கள் எம். பொறைக்கலம், உசேன் ஆகியோர், "காங்கிரஸ் ஆட்சியானது வர்த்தகச் சூதாடிகளுக்கு ஆதரவாக இருந்து, பொதுமக்களை வயிற்றில் அடிக்கிறது" என்று விளக்கிப் பேசினார்கள். விலைவாசி உயர்வால் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கும் சென்னை மக்கள் இந்த ஊர்வலத்தினரை பெரிதும் பாராட்டினார்கள்.

**மயிலையிலும் சைக்கிள் ஊர்வலம்**

கம்யூனிஸ்ட் கட்சியின் மயிலை ஏரியா கமிட்டியின் சார்பில் 4-10-59 காலை 9 மணிக்கு சைக்கிள் ஊர்வலம் புறப்பட்டு மைலாப்பூர் தொகுதி முழுவதும் சமாதான கோஷங்களையும், விலைவாசி உயர்வு எதிர்ப்பு கோஷங்களையும், இந்திய-சீன நல்லுறவைக் கெடுக்கும் பிற்போக்குக் கும்பலை அம்பலப் படுத்தும் கோஷங்களையும் முழக்கிக் கொண்டு சென்றார்கள். ஊர்வலத்தைக் கண்ட மக்கள் பெரிதும் உற்சாக

## கொள்முதல் செய்ய மறுக்கும் சர்க்காரை கொள்முதல் செய்யவைப்போம்!

### படி அரிசி 12 அணுவிற்கு கொடுக்க வைப்போம்!

### காஞ்சியில் தோழர் ஜீவா முழக்கம்

காஞ்சீபுரம், அக். 5—

"சோறு கிடைக்காமல் சாவதைவிட சோறு கிடைக்க வேண்டுமென்பதற்காகச் சாவோம். மக்களுக்கு உணவு கொடுக்காது தட்டிக் கழிக்கும் அரசாங்கத்தை உணவு கொடுக்க வைப்போம்" என்று தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் ஜீவா நேற்று இங்கு பேசிய பொதுக் கூட்டம் ஒன்றில் கரகோஷத்திற்கிடையே கூறினார்.

ஜீவா வாசக சாலையைப் பார்வையிடுவதற்காகச் சென்ற ஜீவா அவர்களை, சிறிது நேரமாவது பேச வேண்டுமென்று திரளாகக் கூடியிருந்த மக்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க 15 நிமிட நேரம் பேசினார். வாசக சாலையின் முன்பு நடைபெற்ற அக் கூட்டத்திற்கு தோழர் அரு. ராமசாமி தலைமை வகித்தார். ஜீவாவிற்கு கட்சியின் பல கிளைகள், சங்கங்களின் சார்பாக மலர் மாலைகளும், கைத்தறி ஆடைகளும் அணிவிக்கப்பட்டன.

**அரசியலும் அரிசியும்**

பின்னர் தோழர் ஜீவா தொடர்ந்து பேசுகையில், "தொழிலாளர்களாகிய நமக்கு அரசியல் வேண்டியிருக்கிறது ஏனெனில் வயிற்றுக்கு சோறு வேண்டியிருக்கிறது. நாம் உற்பத்தி செய்யும் ஆடைகள் விற்பதற்கு உத்தரவாதம் வேண்டியிருக்கிறது. (சிரிப்பு) அதற்கும் மார்க்கெட் தேவையிருக்கிறது. மார்க்கெட் மட்டும் இருந்தால் போதாது. வாங்குவதற்கு மக்களும் வேண்டியிருக்கிறது. அம் மக்களிடம் வாங்குவதற்கான சக்தியும் வேண்டியிருக்கிறது. நமக்கு நன்கு வேலையும் கிடைக்க வேண்டும்; வேலைக்குத் தகுந்த கூலியும் கிடைக்க வேண்டும். எனவேதான் தொழிலாளர்களுக்கு அரசியல் வேண்டியிருக்கிறது. (கைதட்டல்)

**அற்புதங்கள் செய்பவர்கள் யார்?**

"தொழிலாளர்களுக்கு வேலையும், கூலியும் கிடைப்பதில் அரசாங்கத்திற்கும் பொறுப்புண்டு. அரசாங்கம் தட்டிக் கழித்துக் கொண்டு காலம் கடத்துவதை இனி தொழிலாளர்கள் அனுமதிக்கமாட்டார்கள். இன்று உலகில் ஓர் அற்புதம் நிகழ்ந்திருக்கிறது. சந்திர மண்டலத்திற்கு ராக்கெட்டை அனுப்பிய சோவியத் விஞ்ஞானிகள், கிரகங்களுக்கிடையே தானாக இயங்கும் ஒரு வான மண்டல (மேடை) நிலையத்தையும் அனுப்பிவிட்டார்கள். (கரகோஷம்).

"இங்ஙனம் அற்புதத்திற்கு மேல் அற்புதத்தை சிருஷ்டித்துக் கொண்டிருக்கும் அவ் விஞ்ஞானிகள் யார்? ஒரு காலத்தில் நம்மைவிட தாழ்வுற்று, வறுமை மிஞ்சி வாடிக்கிடந்த தொழிலாளர்களின் பிள்ளைகள் என்பதை உங்களுக்கு நினைவு படுத்துகிறேன்.

"இன்று அத்தகைய ரஷ்யாவில் லட்சோப லட்சம் விஞ்ஞானிகளை, தொழில் நுட்ப வல்லுனர்களை, எண்ணற்ற கலைஞர்களை தயார் செய்து விட்டார்கள். அவர்கள் இப்பொழுது இந்த உலகத்திலிருந்து வான மண்டலத்திற்குப் புறப்பட்டு விட்டார்கள். இதனை எதற்காகக் கூறுகிறேன் என்பதை சிந்தித்துப் பார்க்கவேண்டும். தொழிலாளி வர்க்கம் விழித்தெழுந்தால், திரண்டெழுந்தால் எத்தகைய சாதனைகளைச் சாதிக்க முடியும் என்பதை இன்றைய அரசாங்கத்திற்கு நினைவுபடுத்தவே கூறுகிறேன்! (சிரிப்பும் கரகோஷமும்.)

**அங்கும் இங்கும்**

"சோவியத் யூனியனும், இதர சோஷலிச நாடுகளிலும் வயிற்றுப் பிரச்சினையைத் தீர்த்துக் கொண்டு வானமண்டலப் பிரச்சினைக்குப் போய்விட்டார்கள். ஆனால் இங்கு நடைபெறுவதென்ன? மக்களுக்கு அரை வயிற்றுக்காவது சோறு கொடுங்கள், உணவு தானியம் கொள்முதல் செய்யுங்கள் என்றால் மந்திரிகள் மாட்டோ மென்கிறார்கள். நாட்டில் குறைந்த விலைக்கு உணவுப் பொருட்கள் கிடைத்தால் கொள்முதலும் வேண்டாம்; உணவு தானியக் கடைகளும் வேண்டாம். ஆனால் அமைச்சர்கள் என்ன சொல்லுகிறார்கள்? உணவு உற்பத்தி பெருகியிருக்கிறது என்கிறார்கள். அதே நேரத்தில் விலைவாசியும் உயர்ந்திருக்கிறது என்று கூறுகிறார்கள். இதற்கு காரணம் யார்? செயற்கைப் பஞ்சத்தைச் சிருஷ்டிக்கும் பெரும் மிராசுதார்களும், அவர்களிடம் தானியங்கள் வாங்கும் பெரும் வியாபாரிகளும் தான்! அவர்கள் விளைந்த தானியங்களையெல்லாம் பதுக்கி வைத்திருக்கிறார்கள். அந்த சர்க்கார் மக்களைப் பாதுகாப்பதற்காக இருக்கின்ற சர்க்காரென்றால் இவர்களிடமுள்ள தானியத்தை எடுக்க வேண்டும். ஆனால் ஏழைப் பங்காளரான உணவு அமைச்சர் பக்தவத்சலம் நாங்கள் கொள்முதல் செய்யமாட்டோம் என்று கூறுகிறார். இதன் பொருள் என்ன? நிலப்பிரபுக்களிடமிருந்தோ, வியாபாரிகளிடமிருந்தோ எடுக்கமாட்டோம் என்பதுதானே! இவர்களா நம்மைக் காப்பாற்றுபவர்கள்? ஏழைப் பங்காளர்கள்? (கைதட்டல்).

**படலின் வியாக்யானம்**

"பக்தவத்சலத்தை கேட்டால் டில்லி மீது பழி போடுகிறார், டில்லியைக் கேட்டால் என்ன சொல்கிறது?

"இப்பொழுது வந்திருக்கிற புதிய உணவு மந்திரி எஸ். கே. பாடீல் அமெரிக்காவில் 50 லட்சம் டன் வாங்கலாம். அமெரிக்க உளுத்துப்போன கோதுமை வந்தால் இங்கே ஒளித்து வைத்திருக்கின்ற தானியங்களெல்லாம் முச்சந்திக்கு வந்துவிடும் என்று வியாக்யானம் செய்கிறார். இங்ஙனம் பக்தவத்சலமும் பாடீலும் காட்டுகிறார்! (சிரிப்பு) இந்த மந்திரிகள் உணவு தானியம் கொள்முதல் செய்து மக்களுக்கு உணவு தருகிறோம் என்று வாய்திறந்து சொல்ல மறுக்கிறார்கள். ஆனால் இன்று நாட்டின் நிலைமை என்ன? வங்காளத்தில் சோறு கிடைக்கவில்லை! பீகாரில் உணவு கிடைக்கவில்லை! உ. பி. யில் உணவுத் தட்டுப்பாடு! தமிழகத்தில் ராமநாதபுரம், நெல்லை, செங்கல்பட்டு ஜில்லாக்களின் சில பகுதிகளில் பஞ்சம்!

**சீனாவைப் பார்**

"நமக்குப் பின்னும் விடுதலை பெற்ற சீனத்தைப் பாருங்கள். அன்ன விசாரத்தை ஒழித்து விட்ட 65 கோடி மக்கள் தொகையைக் கொண்ட மக்கள் சீனத்தைப் பாருங்கள். அணை கட்டவேண்டிய இடத்தில அணையைப் போட்டு, தண்ணீரைத் தேக்கவேண்டிய இடத்தில தேக்கி, 60 கோடி மக்களுக்கு நிலம் அளித்து உற்பத்தியில் அற்புதங்கள் செய்கிறார்கள் அத்துடன் உலக மார்க்கெட் விலையைவிடக் குறைந்த விலைக்கு நமக்கு 10 லட்சம் டன் அரிசியும் கொடுத்தார்கள். (கைதட்டல்)

"இங்ஙனம் உலகம் முன்னேறிக்கொண்டிருக்கும் பொழுது இங்கு பொறுப்பில்லாத காங்கிரஸ் சர்க்காரின் நடவடிக்கைகளைப் பார்த்துக்கொண்டு கைகட்டிக் கொட்டாவி விட்டுக்கொண்டிருக்க முடியுமா? இந்த சர்க்காரின் மக்கள் விரோதப் போக்கு நம்மை ஒரு திசை வழியில் துரத்திக்கொண்டிருக்கிறது.

"இங்கு சோறு கிடைக்காமல் சாவதைவிட, மக்களுக்கு சோறு கிடைக்க வேண்டுமென்பதற்காகச் சாவோம். (கைதட்டல்) பத்து ஏக்கருக்கு மேல் நிலம் வைத்திருக்கும் மிராசுதார்களிடம் அரசாங்கம் கொள்முதல் செய்யாவிட்டால் கொள்முதல் செய்ய வைப்போம். படி அரிசி 12 அணுவுக்குக் கொடுக்க வைப்போம். (நீண்ட கைதட்டல்) இதற்கு எல்லா மக்களும் கட்சி வேறுபாடின்றி அணி திரள வேண்டும், அணி திரண்டு உறுதியான நடவடிக்கை எடுக்கவேண்டிய காலம் வந்துவிட்டது.

"எனவே மக்களுக்கு குறைந்த விலைக்கு, போதுமான அரிசி கிடைக்க மிகப்பெரும் அறப்போராட்டம் நடத்த கம்யூனிஸ்ட் கட்சி, முன்னேற்றக் கழகத்தோடும், தமிழரசு கழகத்தோடும், திராவிட கழகத்தோடும், சோஷலிஸ்டு, பிரஜா சோஷலிஸ்டுக் கட்சிகளோடும், ஏன், சுதந்திராக் கட்சியோடும் கூட, ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறது.

"அழுத பிள்ளைக்குத்தான் பால் கிடைக்கும் என்பதை நினைவுபடுத்தி, எல்லோரும் ஒன்றுபட்டுப் போராட கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் எல்லா இயக்கத் தலைவர்களையும் அழைக்கிறேன்" என்று கரகோஷத்திற்கிடையே கூறி முடித்தார்.

## நிருவாகத்தில் தொழிலாளருக்கு பங்கு வேண்டும்

### கோவை மகாநாட்டில் பார்வதி கிருஷ்ணன் பேச்சு

கோயம்புத்தூர், அக் 4—

தொழிற்சாலை நிருவாகங்களில் தொழிலாளர்களுக்கும் பங்கு வேண்டுவதென்பது மிகவும் அவசியமானது என்று இங்கு நடைபெற்ற கோயம்புத்தூர் மாவட்ட பாங்க் ஊழியர்கள் சங்கத்தின் 6-வது வருடாந்திர மகாநாட்டில் பேசும்போது கம்யூனிஸ்ட் தலைவர் பார்வதி கிருஷ்ணன் (எம். பி.) குறிப்பிட்டார்.

பாங்க், இன்ஷ்யூரன்ஸ் போன்ற நிறுவனங்களில் தொழிலாளர்களுக்குப் பங்கு இருக்குமானால் வேலைகளில் அபிவிருத்தியை நிச்சயம் காண முடியுமென்று மேலும் அவர் கூறினார்.

கோவை நகரசபை உதவி தலைவர் திரு. எஸ். ஆறுமுகம் பேசுகையில், பாங்குகளை தேசியமாக்க வேண்டுமென்றார். இதனால் ஊழியர்கள் மட்டுமின்றி தேசமே நன்மையடையுமென்று கூறினார் —பி.டி.ஐ.

## ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் என்ற விதியை மந்திரி மீறுகின்றார்

### கம்யூனிஸ்ட் தலைவர் கண்டனம்

### மதுரை மோட்டார் லேபர் யூனியன் பதினான்காவது ஆண்டு விழா

பெரிய குளம், அக். 3—

நேற்று பிற்பகல் பெரிய குளத்தில் மதுரை மோட்டார் லேபர் யூனியனின் 14-வது ஆண்டு விழா நடந்தது. தோழர் கே.டி.கே. தங்கமணி தலைமை வகித்தார்.

தோழர் கே. எம். சுந்தரம் செங்கொடி ஏற்றிவைத்தார்.

தோழர் செல்வராஜ் விழாவை ஆரம்பித்து வைத்தார்.

**வாழ்த்துரைகள்**

தோழர்கள் டி.ஏ. நாராயணசாமி செட்டியார் (மேட்டுப் பாளையம்), கோவை நகரைச் சேர்ந்த வி. ஆர். நஞ்சப்பன், சென்னை; டிரான்ஸ்போர்ட் தொழிலாளர் சங்கத்தைச் சார்ந்த தோழர் பி. சி. கிருஷ்ணன், கும்பகோணம் தோழர் எஸ். விரையன் ஆகியோர் வாழ்த்துரைகள் கூறினர்.

**கே. டி. கே. தலைமை உரை**

தோழர் கே.டி.கே. தங்கமணி தமது தலைமை உரையில், "நான் மதுரை மோட்டார் தொழிலாளர் சங்கத்தின் மூலமாகத் தான் ஒரு தலைவனானேன். கடந்த 14 ஆண்டுகளாக ... திருக்கிறது. ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலை இழந்தும் கைது செய்யப்பட்டும், பலர் உயிர் துறந்தும் இருக்கிறார்கள். 1944ல் மதுரை நகரில் மோட்டார் தொழிலாளர் சங்கத்தை ஆரம்பித்துவைத்தவர் தோழர் மணலி சி. கந்தசாமியே ஆவர். மதுரை தோழர் வி. கருப்பையா அதனை வளர்த்தார்.

எஸ். ஆர். வி. வேலை நிறுத்தத்தின்போது தொழிலாளர்கள் கட்டுப்பாடாகப் போராடியதால் 800 தொழிலாளர்களுக்கும் சம்பள உயர்வும் 8 மணி நேர வேலை, பஞ்சப்படி ஆகிய உரிமைகளும் சலுகைகளும் கிடைத்தன. ... தானாகவே கிடைத்தன.

**சர்க்கார் துரோகம்**

'ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் என்பது சட்டம். இப்பொழுது சர்க்கார் ஒரு தொழிலுக்கு ஒரு சங்கத்திற்குமேல் இருக்கலாமென்பதைச் செயலில் காட்டிவிட்டார்கள் ஏற்கனவே ஒரு சங்கம் இருந்தும்கூட மற்றொரு சங்கத்தைத் திறந்துவைக்க மந்திரிகள் வருவதைத் தடுத்து நிறுத்தவேண்டும், நமது சங்கத்தைப் பலப்படுத்தவும் வேண்டும்."

மதுரை மோட்டார் லேபர் யூனியன் பொதுச் செயலாளர் தோழர் பாட்சாவின் மறைவுக்கு அஞ்சலி செலுத்தியும் யூனியன் 3-வது நிதியைத் திருத்த வேண்டுமென்றும்.

**தீர்மானங்கள்**

தொழிற்சங்க ஊழியர் தோழர் பாட்சாவின் மறைவுக்கு அஞ்சலி செலுத்தியும் யூனியன் 3-வது நிதியைத் திருத்த வேண்டுமென்றும், வைத்திய வசதி, விபத்தின்போது நிவாரணம், மோட்டார் தொழிலாளருக்கு காக்கி உடைகள், 8 மணிநேர வேலை, லாபத்திற்கேற்ற போனஸ், சர்வீசுக்குத் தகுந்த சம்பளம் முதலிய உரிமைகளை வற்புறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேறின.

**புத்தாண்டு நிர்வாகிகள் தேர்வு**

1959-60-ம் ஆண்டிற்குப் பின்வரும் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:

தலைவர் கே.டி.கே. தங்கமணி; உபதலைவர்கள் எம். என். ஆதிநாராயணன், ஏ. பாலசுப்ரமண்யம், நாராயணசாமி செட்டியார்; செயலாளர் பி. தண்டபாணி, கூட்டு செயலாளர்கள்: எஸ். மன்னார்சாமி, சி. மீனாட்சிசுந்த

## தொழிற்சங்கங்கள் உதவி கிடைக்கும்

### சென்னைப் பல்கலைக் கழக ஊழியர் சங்கப் பொதுக்கூட்டத்தில் ஏ.ஐ.டி.யு.சி. தலைவர் எஸ். எஸ். மிராஜ்கர் முழக்கம்

சென்னை, அக். 5—

சென்னை பல்கலைக்கழக ஊழியர்களின் தொழிற்சங்கத் தலைவர் தோழர் எஸ். மோகன் குமாரமங்கலம் பார்-அட்-லா தலைமையில் கோகலே ஹாலில் இன்று மாலை 6.30 மணிக்கு இச்சங்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

கூட்ட ஆரம்பத்தில் சென்னை பல்கலைக் கழக கட்டிடத்திலிருந்து புறப்பட்ட நூற்றுக் கணக்கான ஊழியர்கள் அடங்கிய ஊர்வலம் வந்து சேர்ந்தது.

தலைவர் பேசுகையில், சென்னை பல்கலைக்கழக ஊழியர்கள் நியாயம் பெற, நல்வாழ்வு பெற தொழிற்சங்கத்தை அமைத்துக் கொண்டு சட்டரீதியாக, அமைதியாக சம்பள உயர்வு, பஞ்சப்படி உயர்வு, நிலையரானவோருக்கு வசதிகள் கோரி வருகையில் பல்கலைக் கழக நிர்வாகம், பழிவாங்கும் நடவடிக்கையில் ஈடுபட்டிருப்பதை வன்மையாக கண்டித்தார். குறைந்தபட்சக் கோரிக்கைகளை ஏற்க மறுத்தால், பழிவாங்கப்பட்டவர்களை திரும்ப வேலைக்கு எடுத்துக் கொள்ள மறுத்தால், நேரடி நடவடிக்கையில் பல்கலைக் கழக ஊழியர்கள், தொழிற்சங்க முறையில் ஈடுபட நேரிடுமென்று பல்கலைக் கழக நிர்வாகிகளுக்கு எச்சரித்தார்.

சென்னை ராஜ்ய பாங்கு ஊழியர்களின் சம்மேளனத் தலைவர் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. லட்சுமணசாமி முதலியார் புத்திசாலித்தனமாக நடந்து கொள்ள வேண்டுமென்றும், ஏழை ஊழியர்கள் மீது தாக்குதல் நடத்தாமல், அவர்களின் நியாயமான கோரிக்கைகளை உடனே அளிக்குமாறு சுட்டிக் காட்டினார்.

இறுதியாகப் பேசிய ஏ. ஐ. டி. யு. சி. தலைவர் தோழர் எஸ். எஸ். மிராஜ்கர், சென்னை பல்கலைக் கழக ஊழியர்களின் சங்கத்தை பல்கலைக்கழக நிர்வாகம் உடனே அங்கீகரிக்க வேண்டுமென்றும், பழிவாங்கப்பட்ட ஊழியரை திரும்பவேலைக்கெடுத்துக்கொள்ள வேண்டுமென்றும், 4-ம் தர சிப்பந்திகட்கும், மற்றவர்களுக்கும் சம்பள உயர்வு, பஞ்சப்படி உயர்வு முதலிய நியாயமான கோரிக்கைகளை உடனே அளிக்கவேண்டுமென்றும், ஆவடியில் சோஷலிச வடிவ சமூக அமைப்பு பற்றி தீர்மானம் நிறைவேற்றிய காங்கிரஸ் ஆட்சியின் கீழ், சென்னை பல்கலைக் கழக சிப்பந்திகள் படுமோசமாக நடத்தப்படுவதை உடனே நிறுத்தி, பல்கலைக் கழக ஊழியர்கள் மனிதர்களாக வாழ வகை செய்ய பல்கலைக் கழக துணைவேந்தர் விரைவில் ஆவன செய்யவேண்டுமென்றும் விளக்கினார்.

மத்திய யூனியன் தொழிலாளர் மந்திரி திரு. நந்தா, முதலாளிகள் அல்லது நிர்வாகம் கன்சிலியேஷனுக்கு வராவிட்டால், உடனே தகராறை ஆர்பிட்ரேஷனுக்கு விடப்படுமென்று முக்கூட்டு மகாநாட்டில் கூறியபடி, பல்கலைக் கழக நிர்வாகம் கன்சிலியேஷனுக்கு வராவிட்டால், திரு. நந்தா தெரிவித்தபடி சென்னை சர்க்கார் நடக்க வேண்டுமென்று கோடிட்டுக் காட்டினார்.

தான் பம்பாய் மேயராக இருந்தபோது, பம்பாய் கார்ப்பரேஷன் 50 ஆயிரம் சிப்பந்திகள், தொழிலாளர்கட்கு ரூ. 1 கோடி சம்பள உயர்வு, பஞ்சப்படி உயர்வு முதலிய வசதிகள் செய்து கொடுத்ததைச் சுட்டிக் காட்டி, கல்கத்தா பல்கலைக் கழகம், கௌஹாத்தி பல்கலைக் கழகம் ராஜஸ்தான் முதலிய இடங்களில் கொடுக்கும் அளவிற்காவது சம்பளம் முதலிய வசதிகள் சென்னை பல்கலைக் கழக ஊழியர்கட்குக் கிடைக்க வேண்டுமென்று சென்னை பல்கலைக் கழகத்தினருக்கு இடித்துக்காட்டினார்.

பல்கலைக் கழக ஊழியர்களின் கோரிக்கைகள் நியாயமானவை என்பதை நாடெங்கும் ஏ. ஐ. டி. யு. சி. தலைவர் என்ற முறையில் தான பிரசாரம் செய்து ஆதரவு திரட்டித் தருவதாக உறுதி கூறினார்.

சென்னை பல்கலைக் கழகம் அதன் நல்ல பெயருக்கும் புகழுக்கும் ஒப்ப, ஊழியர்களின் கோரிக்கைகளை உடனே அளிக்குமாறு வேண்டிக் கொண்டார்.

பல்கலைக் கழக நிர்வாகம் ஊழியர்கள் சங்க கோரிக்கைகளை அளிக்க மறுத்தால், அல்லது காலதாமதம் செய்தால், ஊழியர்கள் நேரடி நடவடிக்கையில் இறங்க அவர்களுக்குத் தெரியுமென்று எச்சரித்தார்.

சகோதர தொழிற்சங்கங்களின் பூரா ஆதரவும் சென்னை பல்கலைக் கழக ஊழியர் சங்கத்தின் பக்கமே உள்ளதென்பதையும் சென்னைப் பல்கலைக் கழக துணை வேந்தர் கவனிக்கும்படி நயமாக எடுத்துரைத்தார்.

செயலாளர் நன்றி கூறிய பின்னர், கோஷங்களிடையே கூட்டம் இனிது முடிந்தது.

## புதுவை கம்யூனிஸ்ட் தலைவர் சுப்பையாவுக்கு காஞ்சிமாநகரில் கோலாகல வரவேற்பு

காஞ்சிபுரம், அக். 1—

புதுவை கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் வ. சுப்பையாவுக்கு காஞ்சிபுரத்தில் மகத்தான வரவேற்பு கொடுக்கப்பட்டது.

7-9-59 தேதி திங்கள் மாலை 2 மணிக்கு காஞ்சிபுரம் ஜீவா வாசக சாலை ஆண்டு விழா மகாசபைக் கூட்டம் தோழர் ஏ. கே. ஆள்வார் எம். சி. தலைமையில் நடைபெற்றது. தோழர் அரு. ராமசாமி, ஜீவா வாசகசாலை செயலாளர் ஆண்டு அறிக்கை வாசித்தார். அதன் பிறகு தோழர் கே. எஸ். பார்த்தசாரதியும் தோழர் வ. சுப்பையாவும் பேசினர்.

அதன் பிறகு மாலை 4 மணிக்கு அதிர்வேட்டுகள் முழங்க யானை, குதிரை, சிலம்பு விளையாட்டுகளுடன், காரில் இரு செங்கொடிகள் ஜோடிக்கப்பட்டு தோழர் வ. சுப்பையாவும், திருமதி சரஸ்வதி சுப்பையாவும் நின்றுகொண்டு பவனி வர 5000 பேர்கொண்ட மாபெரும் ஊர்வலம் புறப்பட்டது.

செவிலிமேடு, ஐயன்பேட்டை, வன்னியம்பேட்டை, சின்ன அய்யன்குளம், காவேரிபாக்கம், கோவிந்தவாடி அகரம், வையாவூர் இக்கிராமங்களிலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு வந்து ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். மாதர்கள் 500 பேர் கலந்து கொண்டனர். பாண்டு வாத்யங்கள் முழங்க ஊர்வலம் ராஜவீதி வழியாகச் சென்றது. அமுதபடி தெருவில் தலைவருக்கு வரவேற்பு அளிக்கப்பட்டு கைத்தறி வேஷ்டியும் அணிவிக்கப்பட்டது. கற்பக விலாஸ் சார்பிலும், சங்கர்கேப் சார்பிலும் மலர்மாலைகள் அணிவிக்கப்பட்டது. இரவு 7-30 மணிக்கு பொதுக்கூட்டம் நடைபெறும் இரட்டை மண்டபத்திற்கு ஊர்வலம் வந்தடைந்தது.

பொதுக்கூட்டத்திற்கு தோழர் ஏ. கே. ஆள்வார் தலைமை வகித்தார். தோழர் கே. எஸ். பார்த்தசாரதி, சரஸ்வதி சுப்பையா, வி. சுப்ரமண்யம், ரங்கநாதன் (புதுவை) பேசிய பிறகு தோழர் வ. சுப்பையா அவர்கள் பேச எழுந்தபோது 40 ஸ்தாபனங்களின் சார்பாக மலர்மாலைகள் கைத்தறித்துணிகள் அணிவிக்கப்பட்டன.

6000 பேர் கொண்ட பொதுக் கூட்டத்தில் தோழர் வ. சுப்பையா அவர்கள் பேச எழுந்தபோது புதுவை கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் வாழ்க என்ற கோஷங்கள் விண்ணை எட்டின.

தோழர் சுப்பையா பொதுக் கூட்டத்தில் பேசுகையில், தனக்களிக்கப்பட்ட உற்சாகமான வரவேற்புக்கு நன்றி தெரிவித்தார்.

புதுவையில் மக்கள் முன்னணிக்குக் கிடைத்த வெற்றிகளைப் பற்றியும், காங்கிரசின் சூழ்ச்சிகளைப்பற்றியும் விரிவாகப் பேசினார்.

## கோவை பஞ்சாலை தொழிலாளர் போனஸ் பிரச்சினை

கோவை, அக். 6—

கோவை பஞ்சாலைத் தொழிலாளருக்கு 1958ம் வருஷ போனஸ் கொடுக்கவேண்டிய பிரச்சினையைச் சென்னை தொழில் கோர்ட்டின் தீர்ப்புக்கு சென்னை சர்க்கார் விட்டுள்ளது.

இத்தகராறில் 50 ஆயிரம் தொழிலாளர் சம்பந்தப்பட்டிருப்பதாக இன்று கோவை ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் துணைச் செயலாளர் சி. கோவிந்தன் அறிவித்தார்.

போனஸ் பிரச்சினை விஷயமாக சென்னையிலும் கோவையிலும் சர்க்கார், மில் நிர்வாகம், தொழிலாளர் ஆகிய முக்கட்சிகளின் பிரதிநிதிகளிடை சமீபத்தில் நடந்த பேச்சுவார்த்தை தோல்வியுற்றது. (பி-டி-ஐ)

## உடன்பாடு ஏற்படாவிட்டால் 20 தொகுதிகளில் போட்டியிடுவோம்!

### பு. சோ. கட்சி மிரட்டுகிறது!

கொல்லம், அக். 6—

இடைத் தேர்தலில் போட்டியிடுவது சம்பந்தமாக கம்யூனிஸ்டு அல்லாத கட்சிகளுடன் பேச்சுவார்த்தை நடத்த பிரஜா மாநில பு. சோ. கட்சி ஸ்ரீகண்டன் நாயர், கோபிநாத் நாயர் மற்றும் ஒருவர் அடங்கிய ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறது.

பின்னர் பு. சோ. கட்சி வெளியிட்ட ஒரு அறிக்கையில் "கம்யூனிஸ்டு அல்லாத கட்சிகள் இன்றைய நிலைமையை உணர்ந்து கடமையைச் செய்யுமென்று எதிர்பார்க்கிறோம். இல்லையெனில் எங்களுக்கு செல்வாக்கு வாய்ந்த 20 தொகுதிகளில் எங்கள் பலத்தை நம்பியே போட்டியிடுவோம்" என்று கூறியிருக்கிறது.

## உலகமே மாறினாலும் மராமத்து இலாகா மாறமாட்டேனென்கிறதே!

### நேரு வருத்தம்

புனா, அக். 6—

"இன்று உலகமே மாறிக் கொண்டிருக்கும் பொழுது பொது மராமத்து இலாகா மட்டும் மாற மாட்டேனென்கிறது. பழைய பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் அந்த இலாகா எப்படி ... ஆட்சி முறையையே கடைப் பிடிக்கின்றது" என்று இந்திய பிரதமர் நேரு மராமத்து இலாகாவின் மீது இன்று குற்றம் சாட்டினார்.

இங்குள்ள சேவா சதனத்தில் பேசிய நேரு பள்ளிகளும், மருத்

# 3-வது திட்டத்தின் கீழ் சென்னை ராஜ்யத்திற்கு 300 கோடி முதலீடு

## மின்சார அபிவிருத்திக்கு முதலிடம்

### சென்னை ராஜ்ய சர்க்காரின் சிபாரிசுகள்

புதுடில்லி, அக். 5—

3-வது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் சென்னை ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் அபிவிருத்தி திட்டங்களுக்கு 275 கோடி ரூபாய் முதல் 300 கோடி ரூபாய் வரையில் முதலீடு அவசியமாகுமென்று சென்னை சர்க்கார் பூர்வாங்கமாக மதிப்பிட்டிருக்கின்றனரென்று தெரிகிறது. மின்சார அபிவிருத்திக்கே முதலிடம் தரப்பட்டிருக்கிறது.

சென்னை ராஜ்ய சர்க்காரின் பிரேரணைகள், சட்டசபைகளின் சர்வகட்சி கமிட்டி ஒன்றால் பரிசீலனை செய்யப்படுமென்றும் பிறகே இறுதியாக பிரேரணைகள் சமர்ப்பிக்கப்படுமென்றும் திட்டக் கமிஷனுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது.

3-வது திட்டத்தின் சென்னை ராஜ்யத்தைப் பொறுத்தவரையில மின்சார அபிவிருத்திக்கே முதலிடம் தரப்படும். இது சம்பந்தமாக ஏழாண்டு திட்டமொன்று தயாரிக்கும்படி ராஜ்ய மின்சார போர்டுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது திட்டமுடிவில் ராஜ்யத்தில் சில புது தொழில்களை ஆரம்பிப்பது சாத்தியமாகும் வகையில் மின்சாரம் அபிவிருத்திசெய்யப்படும்.

**விவசாய உற்பத்தி**

2-வது திட்ட முடிவில் சென்னை ராஜ்யத்தில் 54½ லட்சம் டன் உணவுதானியம் உற்பத்தியாகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. 3-வது திட்ட முடிவில் 72¼ லட்சம் டன் உற்பத்தி செய்ய முயற்சி செய்யப்படும். ரசாயன உரம், சிறு நீர்ப்பாசனங்கள் விஸ்தரிப்பு இவை மூலம் விவசாய உற்பத்தியைப் பெருக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. 1965-66-ல் பருத்தி உற்பத்தியை 6 லட்சம் பேலாக அதிகரிக்கவும் முடியுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால் உருளைக் கிழங்கு உற்பத்தி பெருகுமென்று தெரியவில்லை.

500 டிராக்டர்களை அமர்த்தி கலனி நிலங்களைச் சாகுபடிகளைக் கொண்டுவரவும் முயற்சிக்கப்படும்.

**பெரிய நீர்ப்பாசன திட்டங்கள்**

3-வது திட்ட இறுதியில் பெரிய நீர்ப்பாசன திட்டங்கள் மூலம் 3¾ லட்சம் ஏகர் நிலம் நீர்ப்பாசன வசதிபெறும். 1965-66ம் ஆண்டிற்குள் மேற்கொண்டு 4 லட்சம் ஏகர் நிலம் நீர்ப்பாசன வசதிபெறும். பரம்பிக்குளம் திட்டத்தால் 2½ லட்சம் ஏகர் நிலமும் நடுத்தர திட்டங்கள் மூலம் 4½ லட்சம் ஏகரா நிலமும் நீர்ப்பாசன வசதிபெறும்.

கேரள சர்க்காரின் சம்மதத்துடன் சில நதிகளின் திசையை கிழக்கு நோக்கி மாற்றவேண்டுமென்று இந்திய சர்க்காருக்கு சென்னை சர்க்கார் யோசனை தெரிவித்துள்ளது. அந்த நதிகளின் ஜலம் இப்பொழுது வீணாவதாகவும் அவற்றை கிழக்கு திசையில் ஓடச்செய்தால் சென்னை ராஜ்யத்திற்கு நீர்ப்பாசன வசதிகிடைக்குமென்றும் கூறப்படுகிறது. இந்த ஏற்பாட்டில் தென்கிழக்கு பிரதேசம் கணிசமான அளவு அனுகூலமடையும்.

**சாலைகள் அபிவிருத்தி**

2-வது திட்டத்தின் சாலை அபிவிருத்திக்கு முதலீடு 6 கோடியே 80 லட்சம் ரூபாய். 3-வது திட்டத்தின் கீழ் அத்தொகை மூன்று மடங்கு அதிகரிக்கும்.

கிராமங்களில் சாலைகள் போட்டு பராமரிக்கும் பொறுப்பு, பஞ்சாயத்துக்களிடம் ஒப்புவிக்கப்படும். தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தியும் சேது சமுத்திர திட்டமும் கவனிக்கப்படவேண்டுமென்று ராஜ்ய சர்க்கார் வற்புறுத்தியுள்ளது.

# சர்க்கரைப் பஞ்சம் சுபீட்சத்தின் அறிகுறியாம்

## பிரதமர் நேருவின் விபரீத வியாக்யானம்

பூனா, அக் 5—

நாட்டில் சர்க்கரைப் பஞ்சம் ஏற்பட்டிருப்பது மக்களுக்கு சுபீட்சம் வந்துகொண்டிருக்கிறது என்பதின் அறிகுறியாகும் என்று பிரதமர் நேரு இங்கு ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

நாட்டில் கொள்ளைலாப வியாபாரிகளும், ஏகபோக முதலாளிகளும் சர்க்கரையைப் பதுக்கி வைத்துக்கொண்டு செயற்கையாகப் பஞ்சம் ஏற்படுத்தியிருப்பது நேருவுக்குப் புலப்படாதது விந்தையே.

நாடு சுதந்திர மடைந்த சமயத்தில் ஆண்டு ஒன்றுக்கு இந்தியாவில் சுமார் 10 லட்சம் டன் சர்க்கரைதான் உற்பத்தியாகி வந்ததென்றும், தற்பொழுது 22 லட்சம் டன் உற்பத்தியாகிறது. இன்று ஏராளமான மக்கள் சர்க்கரையை உபயோகப்படுத்த ஆரம்பித்திருப்பதாலேயே இன்று பற்றாக்குறை நிலைமை ஏற்பட்டிருக்கிறது, என்றும் பிரதமர் நேரு கூறினார்.

# 5 லட்சம் அமெரிக்க எஃகுத் தொழிலாளர் போராட்டம் நீடிக்கும்

## ஆள் தூக்கி அடக்குமுறைகளை ஏவப்போவதாக ஐக் அச்சுறுத்தல்

பிட்ஸ்பர்க், அக். 5—

அக்டோபர் 5-ந் தேதியுடன் 83 நாட்களாக நடைபெற்று வரும் எஃகுத் தொழிலாளர் போராட்டம் இன்னும் நீடிக்கிறது. தமது நோக்கங்களைச் சோரவிட்டு சமரசம் செய்து கொள்ளத் தொழிலாளர் விரும்பாததால் சமரச முயற்சிகள் பயனளிக்கவில்லை.

ஐந்து லட்சத்திற்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் இந்தப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். மிகுந்த கட்டுப்பாட்டுடன் போராடி வருகிறார்கள்.

சமரச முயற்சி பலனளிக்காவிட்டால் டாப்ட் ஹார்ட்லி சட்டம் என்னும் அடக்குமுறைச் சட்டங்களை ஏவி வேலைநிறுத்தத்தை சட்டவிரோதமாக்கி பலாத்காரமாகத் தொழிலாளர்களை வேலைக்குத் திரும்பும்படி செய்யப்போவதாக ஐஸன்ஹோவர் அச்சுறுத்தியுள்ளார்.

## சீனாவுக்கு ஐ. நா.வில் இடம்

### விஜயலட்சுமி வற்புறுத்தல்

நியூயார்க், அக் 6—

ஐ. நாவில் சீனாவுக்கு உரிய ஸ்தானத்தை கொடுக்க மறுப்பது வடிகட்டின மூட்டாள்தனம் என்று திருமதி விஜயலட்சுமி பண்டிட் இங்கு கூறினார்.

அமெரிக்காவில் சுற்றுப் பிரயாணம் ஆரம்பித்துள்ள திருமதி பண்டிட் சீன-இந்திய உறவு பற்றியும் குறிப்பிட்டார்.

"அண்டை நாடான சீனாவுடன் சச்சரவு நேரிட்டிருப்பது கண்டு இந்தியா வருந்துகிறது. ஆனால் இதற்கும், ஐ நாவில் சீனாவுக்கு இடம் அளிக்கும் விஷயத்திற்கும் சம்பந்தம் இல்லை," என்று கூறினார்.

# மத்தியான உணவு அருந்தாமல் 9 மணி நேரம் வேலை செய்கிறார்கள்

## குரோம்பேட்டை தொழிலாளர் அறப்போர்

சென்னை, அக். 6—

அரசாங்க கோச் பில்டிங் பாக்டரி (ஜி.சி.பி.எப்.) தொழிலாளர்களும், குரோம்பேட்டை போக்குவரத்து தொழிலாளர்களும் கடந்த 5-10-59 திங்கள் முதல் மத்தியான சாப்பாடோ, சிற்றுண்டி, பானங்களோ எதுவும் அருந்தாமல் காலை 9 மணி முதல் மாலை 5 மணிவரை வேலை செய்து அறப்போர் நடத்தி வருகிறார்கள். மத்தியானம் சாப்பாட்டுக்காக விடப்படும் ஒரு மணி நேர இடைவேளையிலும் வேலை செய்கிறார்கள் இதனால் சீக்கிரமே களைப்புற்றும் பலர் மயக்கமுற்றும் விட்டதாகத் தெரியவருகிறது.

**டைரக்டரின் ஆணவம்**

அரசாங்க உத்தரவுகளின் படி தொழிலாளர்களுக்குக் கிடைக்க வேண்டிய சலுகைகளைக் கொடுக்காமலும், தொழிற்சங்கப் பிரதிநிதிகளுடன் எவ்விதப் பேச்சுவார்த்தையும் நடத்த சம்மதிக்காமலும், டைரக்டர் சீனிவாசன் ஆணவமுடன் இருப்பதால், அரசாங்கம் இதில் தலையிட்டு நீதி வழங்கவேண்டுமென்று தொழிற்சங்கம் கோரியுள்ளது.

தொழிலாளர்களின் போராட்டக்குழு 4-10-59-ல் எடுத்த முடிவின் படி இந்த அறப்போர் நடக்கிறது.

# அரசாங்க ஊழியர் ஸ்ட்ரைக்கை தடை செய்யச் சட்டம்!

## மத்தியப் பிரதேச சட்டமன்றத்தில் நிறைவேறியது!

### எதிர்த்து சட்டமன்றத்தின்முன் ஆர்ப்பாட்டம் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் வெளிநடப்பு

போபால், அக். 7—

அரசாங்க ஊழியர்கள் வேலைநிறுத்தம் செய்வதைத் தடுக்கும் மசோதா ஒன்று இன்று மத்தியப் பிரதேச சட்டமன்றத்தில் நிறைவேறியது. இதனை எதிர்த்து சட்டமன்றத்திற்கு முன்னால் கம்யூனிஸ்டுக் கட்சி மாபெரும் ஆர்ப்பாட்டம் நடத்தியது. எல்லா எதிர்க்கட்சி சட்டமன்ற உறுப்பினர்களும் வெளிநடப்புச் செய்தார்கள்.

அரசாங்கம் தங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றாவிட்டால் இன்று முதல் காலவரையறையின்றி வேலை நிறுத்தம் செய்யப் போவதாக அரசாங்க ஊழியர்கள், அரசாங்கத்திற்கு நோட்டீஸ் கொடுத்திருந்தார்கள். ஊழியர்களின் கோரிக்கைகளையு கவனிக்காது, ஊழியர்களின் வேலை நிறுத்தத்தைத் தடை செய்வதற்கே இச்சட்டம் அவசர அவசரமாகக்கொண்டு வரப்பட்டது. அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்வதை நிறுத்திவிட்டால் மசோதாவை வாபஸ் பெற்றுக் கொள்வதாக முதலமைச்சர் அறிவித்தார். எதிர்க்கட்சிகளின் வேண்டுகோளுக்கு இணங்க ஊழியர்கள் வேலை நிறுத்தத்தைக் கைவிட்டபோதிலும் மசோதா சட்டமன்றத்தில் வைக்கப்பட்டது.

முதலமைச்சர் வாக்குறுதியைக் காற்றில் பறக்க விடுவதைக் கண்டித்தும், ஜனநாயக உரிமைகள் பறிக்கப்படுவதை எதிர்த்தும் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் வெளிநடப்புச் செய்தார்கள். ஏனெனில் மசோதாவிற்கு அங்கத்தினர்கள் கொண்டு வந்த சில திருத்தங்களைக் கூட ஆளும் கட்சி ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டது.

மசோதா நிறைவேறுவதைக் கண்டித்து கம்யூனிஸ்டுக் கட்சி தொண்டர்களும் ஆயிரக்கணக்கான மக்களும் சட்டமன்றத்திற்கு முன்பு ஆர்ப்பாட்டம் செய்தார்கள். ஆர்ப்பாட்டத்திற்கு கம்யூனிஸ்ட் கட்சி சட்டமன்ற உறுப்பினர் தோழர் ஷக்கிர் அலிகான் தலைமை வகித்தார்.

காங்கிரஸ்மெம்பர்கள் மசோதாவிற்கு குரல் மூலம் வாக்களித்தனர் இனியும் அரசாங்க ஊழியர்கள் வேலைநிறுத்தம் செய்யாமென அரசாங்கத்திற்கு நோட்டீஸ் கொடுத்தால் இச்சட்டத்தைப் பயன்படுத்துவோம் என்று முதலமைச்சர் பேசுகையில் குறிப்பிட்டார்.

## சிந்திக்கும்திறனுள்ள சிகப்பு-பச்சை விளக்கு

லெனின்கிராட், அக். 5—

ரஷ்யாவில் லெனின்கிராடு நகரத்தில் முச்சந்திகளில் கார்களின் போக்குவரத்தைச் சமாளிப்பதற்காக சிகப்பு, பச்சை மின்சார விளக்குகள் வைக்கப்பட்டிருக்கின்றன.

வண்டி வாகனங்கள் முச்சந்திகளைக் கடக்கவேண்டுமானால், அங்குள்ள பச்சை விளக்கு ஒன்றிரண்டு நிமிடங்களுக்கொரு தடவை மாறி மாறிக் காட்டும்.

இதில் விசேஷமென்னவென்றால், அந்த விளக்குகள் குறிப்பிட்ட இரண்டொரு நிமிடங்கள் தான் வெளிச்சம் காட்டுவதற்குப் பதிலாக, எந்த வீதியில் அதிக வண்டி வாகனங்கள் உள்ளனவோ அந்த வீதிக்குத்தான் முதலில் பச்சை விளக்கு காட்டி, வண்டிகளை போக அனுமதிக்கும்.

குறிப்பிட்ட வீதியில்தான் அதிக வண்டிகள் உள்ளன என்பதை பச்சை விளக்கு எப்படி அறிய முடிந்தது?

**மூளை உண்டு**

வீதி சந்திப்பில் உள்ள சகல தெருக்களிலும் குறிப்பிட்ட தூரம் வரையிலும் மரப்பலகை பொருத்தப்பட்டிருக்கிறது. அது எந்தத் தெருவில் அதிகவண்டிகள் உள்ளன என்று காட்டி விடுகிறது. அதற்கேற்ப அந்த பச்சை விளக்கு தானாகவே வெளிச்சம் காட்டுகிறது. இது தான் சூட்சமம்.

# பண்டாரநாயகா படுகொலை வழக்கு

## எதிரி புத்தசாமியார் கோர்ட்டுக்கு வரவில்லை

கொழும்பு, அக். 6—

இலங்கை பிரதமர் பண்டாரநாயகாவை சுட்டுக் கொன்ற புத்தமத சாமியார் மீது போடப்பட்ட வழக்கு இன்று கொழும்பு மாஜிஸ்திரேட் கோர்ட் முன் விசாரணைக்கு வந்தது.

புத்த சாமியாரை பார்க்க வண்டும் என்ற அவாவினால் கோர்ட் ஹாலில் திரளான மக்கள் குழுமியிருந்தனர்.

ஆனால் புத்த சாமியார் கோர்ட்டில் ஆஜர் படுத்தப்படவில்லை

காரணம்தொடையில்குண்டுக் காயம்பட்டு நடக்க முடியாத நிலைமையில் அவர் இருக்கிறார் என்று போலீஸார் கூறினர்!

எதிரி வராததாலும் இன்னும் புலன் விசாரணை முடியாததாலும் மாஜிஸ்திரேட் வழக்கை அக்டோபர் 20-ம் தேதிக்கு ஒத்திவைத்தார்.

**சாட்சியம்...**

பண்டாரநாயகாவை சுட்ட துப்பாக்கி, அவரது உடலில் பாய்ந்த குண்டுகள், ரத்தக் கரை படிந்த உடைகள், பாதரக்ஷைகள் இன்னும் பல சாமான்களை, சாட்சியத் தடயங்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டன.

பிரமுகர்கள் பலர் இந்த வழக்கின் சாட்சிகளாக தருவிக்கப்படுவர் என்று தெரிகிறது.

**இன்னொரு வழக்கு**

பண்டாரநாயகாவை கொலை செய்த புத்தசாமியார் சோமராமதேரோ இன்னொரு கிரிமினல் வழக்கிலும் சம்பந்தம் கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது.

ஏமாற்றி பணம் பறித்ததாக இந்த சாமியார் இரண்டாவது எதிரியாக இந்த வழக்கில் சம்பந்தப்பட்டிருக்கிறார். இந்த வழக்கு விசாரணை டிசம்பர் 1-ம் தேதி கோர்ட்டில் நடக்கும். ஏமாற்றி மோசடி செய்த வழக்கில் முதல் எதிரியாக இருப்பவரும் ஒரு சாமியாரே. இந்த சாமியார்தான் பண்டார நாயகா படுகொலையின்போது கொலையாளியுடன் இருந்தவர் என்றும், முதலில் அவர் அகப்படாவிட்டாலும் பிறகு போலீஸாரிடம் மாட்டிக் கொண்டார் என்றும் கூறப்படுகிறது.

**நிபுணர்கள் வருவார்களா?**

பண்டாரநாயகாவை கொலை செய்ய சதி நடந்திருக்கிறது. ஆகையால் இங்கிலாந்தில் இருக்கும் ஸ்காட்லந்து யார்டு துப்பறியும் நிபுணர்கள் வரவேண்டும் என்ற கோரிக்கை இலங்கை முழுவதும் எழுந்துள்ளது தெரிக்கிறது. இந்த நிபுணர்கள் உடனடியாக இலங்கை வருவார்களா என்று இப்போது சொல்ல முடியாதாம். ஆனால் கூடிய சீக்கிரமே இது பற்றி சர்க்கார் முடிவு அறிவிக்கப் படுமாம்.

## மத்தியப்பிரதேச அரசாங்க ஊழியர்கள் வேலைநிறுத்தம் வாபஸ்

போபால், அக் 6—

மத்தியப் பிரதேச அமைச்சர்கள் இலாகா ஊழியர்கள் தங்கள் வேலைநிறுத்த நடவடிக்கையை ஒத்திப்போட்டுவிட்டார்கள். சட்ட மன்றத்தைச் சேர்ந்த பல்வேறு கட்சி அங்கத்தினர்களின் வேண்டுகோளுக்கு இணங்கவே வேலைநிறுத்தத்தைக் கைவிட்டனர். ஊழியர்களின் கோரிக்கைகளை அரசாங்கம் கவனிக்குமாறு செய்வதில் பெருமுயற்சி எடுத்துக்கொள்வோம் என்று காங்கிரஸ் கட்சி உள்ளிட்ட எல்லா கட்சிகளின் சார்பாக ஏழு சட்டமன்ற உறுப்பினர்கள் அரசாங்க ஊழியர்களுக்கு வாக்குறுதி அளித்து அறிக்கை விட்டிருக்கிறார்கள். அதன் பேரிலேயே வேலைநிறுத்தம் வாபஸ் செய்யப்பட்டது.

கேரளத்தில்:

# பத்தாயிரம் கலகக்காரர்கள் மீதுள்ள வழக்குகள் வாபஸ்!

## கலகத் தலைவர்கள் மீதுள்ள வழக்குகள்பற்றி இரண்டு வாரத்தில் முடிவாகுமாம்!

திருவனந்தபுரம், அக். 7—

தற்பொழுது வழக்கு மன்றங்களில் இருக்கும் 2700-க்கு மேற்பட்ட வழக்குகளை, கேரள அரசாங்கம் திரும்பப் பெற்றுக் கொள்வதென முடிவு செய்துவிட்டது. ஆங்காங்கேயுள்ள வழக்குகளை திரும்பப் பெற்றுக் கொள்ளுமாறு அரசாங்க அதிகாரிகளுக்கு உத்தரவிடப்பட்டுள்ளது இதனை கவர்னரின் ஆலோசகர் டி. வ. ஆர். ராவே இன்று வெளியிட்டார்.

கேரள அரசாங்கத்திற்கு விரோதமாக கலகம் செய்த பத்தாயிரத்திற்கு மேற்பட்டவர்கள் மீதே இவ்வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. இவர்களெல்லாம் மறியல், சட்டவிரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டாலும் பலாத்காரத்தில் ஈடுபடவில்லை யென்று அதற்கு வியாக்கியானம் கூறினர்.

மேலும் 5600 கலகக்காரர்கள் சம்பந்தப்பட்ட 246 வழக்குகள் இருக்கின்றன. இவர்கள் அரசாங்கச் சொத்திற்கு சேதம் விளைவித்தவர்கள். இவர்களுடைய வழக்குகள் சம்பந்தமாக அரசாங்கம் ஆலோசித்துக் கொண்டிருக்கிறது. இவர்களில் 16 பேர் சொற்ப பலாத்காரத்தில்தான் இறங்கினார்கள் என்றும் ராவ் கூறினார். இதிலிருந்து இவ்வழக்குகளும் திரும்பப் பெறுவதற்கு அரசாங்கம் ஆலோசிக்கிறது என்று தெரிகிறது.

கேரள கலவரத் தலைவர்கள், அவர்களது பத்திரிகைகள் மீதுள்ள 35 வழக்குகள் திரும்பப் பெறுவது சம்பந்தமாக இன்னும் இரண்டு வாரத்தில் அரசாங்கம் முடிவு செய்யும். துப்பாக்கிப் பிரயோகம்பற்றி விசாரணை செய்ய அரசாங்கம் உத்தரவு பிறப்பிக்குமா என்று கேட்கப்பட்ட கேள்விக்கு "அரசாங்கம் இன்னும் எம்முடிவும் செய்யவில்லையென்றும், பல்வேறு அம்சங்களையும் கணக்கிலெடுத்துக்கொண்டு விசாரணை செய்வதா இல்லையா என்பது முடிவு செய்யப்படும்" என்றும் ராவ் கூறினார்.

கேரள கல்வி மசோதா திருத்தப்படுமா என்று கேட்கப்பட்ட கேள்வி ஒன்றிற்கு "கல்வி மசோதா சம்பந்தமாக சென்ற மாதம் கவர்னரால் நியமிக்கப்பட்ட கமிட்டி சமர்ப்பிக்கும் அறிக்கையைப் பொறுத்தே முடிவு செய்யப்படும்" என்று கூறினார். அவர் மேலும் கூறுகையில், குடியரசுத் தலைவரின் முன்னால் இருக்கும் கேரள விவசாய உறவு மசோதா, ஜென்மிகரம் ஒழிப்பு மசோதா, கடன் நிவாரண மசோதா ஆகிய மசோதாக்கள்பற்றி முன்னதாகவே எவ்வித அபிப்பிராயமும் கூற முடியாதென்றும், ஆனால் இம மசோதாக்கள் சம்பந்தமாக பல்வேறு பகுதி மக்களிடமிருந்தும் மகஜர்கள் வந்திருக்கிறதென்றும் அவைகள் பரிசீலிக்கப்படும் என்றும் கூறினார்.

## உள்கட்சி குஸ்தி

### இந்திராகாந்தி தவிப்பு

புதுடில்லி, அக். 5—

அடங்கிக் கிடந்த பஞ்சாப் காங்கிரஸின் உள்கட்சிப் பூசல் மீண்டும் தலைதூக்கி விட்டது. பஞ்சாப் பிரதமர் கெய்ரானுக்கு எதிரான, காங்கிரஸ் அதிருப்தியாளர்கள் கலகக் கொடி தூக்குகிறார்கள். 15 பேர் கொண்ட கமிட்டி அமைத்து அக்டோபர் 14-ல் லூதியானாவில் மகாநாடு நடத்தப் போகிறார்கள். இதனால் காங்கிரஸ் மேலிடத்துக்கு ஒரே தலைவலியாயிருக்கிறதாம். நெருக்கடியை மேலும் அதிகப்படுத்தி, காங்கிரஸின் மானம் மரியாதையைச் சந்திக்கு இழுக்க வேண்டாமென்று மேலிடத்தார் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இது பற்றி காங்கிரஸ் தலைவர் இந்திரா காந்தியைக் கேட்டபோது அதிருப்தியாளர்கள் தனி மகாநாடு கூடுவது தனக்குப் பிடிக்கவில்லையென்றும், எனினும் என்ன சொல்வதென்று தெரியவில்லை யென்றும் பதிலளிக்க முடியாமல் தவித்தாராம்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

# ... இதுதான் நியாய விலையா?

கட்டணம் என்று மட்டும் குறிப்பிடுகிறது.

**அப்படியும் 80 நயா பைசாதான்**

இரண்டு மணங்கு அரிசி கொள்ளும் ஒரு கோணிச் சாக்கு விலை ஒரு ரூபாய். அரிசியை விற்றுவிட்டுக் கோணியை உடனே 75 நயா பைசாவுக்கு விற்கலாம். எனவே கோணி விலை என்ற இனத்தில் மணங்குக்கு 19 நயா பைசா என்று போட்டாலே போதும்.

கொள்முதல் செய்யும்போது இரண்டு மணங்கு அரிசியைக் கொண்டுவர உபயோகிக்கும் கோணிக்கு 50 நயா பைசா என்றே விலை நிர்ணயித்திருக்கிறது சர்க்கார் என்ற தகவலை இங்கு குறிப்பிடுவது நல்லது

ரயில்வே கட்டணத்தைப் பொறுத்தவரையில் தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து சென்னை நகரத்திற்கு அரிசி கொண்டுவர டியு சி.எஸ் மூட்டைக்கு ஒரு ரூபாய்க்கு மேல் செலவழிக்கவில்லை என்று தெரிய வருகிறது. எனவே ரயில்வே கட்டணம் மணங்குக்கு 50 நயா பைசா என்று கணக்கிடலாம். விற்பனை வரியோ 17 ரூபாய்க்கு 17 நயா பைசாக்கள்.

இந்த மூன்று இனங்களையும் சேர்த்தால் 86 ந. பை வே வரும். எனவே நிகர் லாபம் உட்பட மொத்தச் செலவு மணங்குக்கு ரூ 1-82. அதாவது 47 படி கொண்ட மூட்டைக்கு ரூ. 3-64 ஆகும். இந்த அடிப்படையில் விற்பனை விலை பட்டணம்படி 80 நயா பைசாவாக இருக்க வேண்டும். 88 நயாபைசாவாக இருக்கக் கூடாது

**வெளி ஜில்லாக்களில்**

இக்கட்டணங்கள் பலவும் சென்னை நகரத்தைப் பொறுத்த மட்டிலதான் உள்ளவை வெளி ஜில்லாக்களில் நியாய விலைக் கடைகளுக்குரிய அரிசியில் ஒரு பகுதி ஸ்தலத்திலேயே கொள்முதல்செய்யப்படுகிறது. எனவே ரயில்வே கட்டணம் எடுபிடிச் செலவு, வண்டிச் செலவு, ரயில் இந்தச் செலவுகளை எல்லாம் குறைத்துக் கொள்ள வேண்டும். திருச்சி ஜில்லாவில் ஜில்லாவின் கொள்முதல் குறிக்கோளாக வைத்திருந்த பத்தாயிரம் டன் கொள்முதல் பூர்த்தி செய்யப்பட்டு விட்டது என்று திருச்சி ஜில்லா கலெக்டர் அறிவித்திருக்கிறார், திருச்சியிலுள்ள நியாய விலைக் கடைகளில் இந்த அரிசி தான்விற்பனை செய்யப்படும் என்பது தெளிவு. தஞ்சையிலிருந்து பிற ஜில்லாக்களுக்கு கொள்முதல் செய்யும் அரிசிக்கு ரயில்வே கட்டணம் சென்னைக்கு கொண்டு வருவதை விட மிகவும் குறைவாகவே இருக்கும் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

எனவே இங்கு சில்லரை விலை சென்னை விலையை விடக் குறைவாகவே இருக்கும் இருந்தாலும் தஞ்சையிலும் திருச்சியிலும்கூட சர்க்கார் நியாயவிலைக் கடைகளில் அரிசிவிலை படி 88 நயா பைசாவாக நிர்ணயித்திருக்கிறது.

அதோடு திருச்சி, நெல்லை, மதுரை முதலிய இதர ஜில்லாக்களில் நியாயவிலைக் கடைகள் மூலம் இரண்டாந்தர அரிசி 88 நயா பைசா முதல் 98 நயா பைசா வரையில் விற்பனை செய்யப்பட்டு வருகிறது எனபதும் தெரிந்ததே.

**மட்டரகத்துக்கும் அதே விலை**

நியாயவிலைக் கடைகளுக்கு சப்ளை செய்யப்பட்ட அரிசி இரண்டாம்தர அரிசியாகும் அதை மணங்கு 17 ரூபாய் கொடுத்து சர்க்கார் கொள்முதல் செய்தது இந்தக் கணக்கின் அடிப்படையில்தான் சர்க்காரின் கணி புகளெல்லாம் இருக்கின்றன என்பதை நாம் ஞாபகப்படுத்திக் கொள்ளுவது நல்லது.

இந்த 17 ரூபாய்க்கு வாங்கப்படும் இரண்டாம்தர அரிசி (சி. ஒ 25 ரகம்) மட்டுமல்ல, அதற்கு ... மதிப்பிடப்பட்டு நிர்ணயித்து, இந்த மட்டரக அரிசியையும் அதே நியாய விலைக் கடைகளில் பட்டணம் படி ஒன்றுக்கு அதே 88 நயா பைசா வீதம் விற்கிறார்கள்.

**லாபவேட்டைக் காரருக்கு உதவும் முறையில் விலை**

நியாயவிலைக் கடைகள் மூலமாக சர்க்கார் நிர்ணயித்துள்ள சில்லரை விலையானது மனச்சாட்சிக்கு விரோதமாக நிர்ணயித்த விலையாகும். மட்டரக அரிசிக்கு அதிக விலை நிர்ணயித்துள்ளதிலிருந்தே, என்ன தெரிகிறதென்றால், பகிரங்க மார்க்கெட்டின் விலையை இறக்கும்படிச் செய்வதற்காக அல்ல; அதற்கு மாறாக, நிலப் பிரபுக்களும், சேமிப்பாளர்களும் பகிரங்க மார்க்கெட்டில் கொள்ளை லாபமடிப்பதற்கு உதவிசெய்வதற்காகவே நிர்ணயிக்கப்பட்ட விலையாகும். சர்க்காரின் இந்த விலை நிர்ணய லட்சணத்திலிருந்து மேற்கண்ட முடிவுக்குத்தான் யாரும் வரமுடியும்

**உண்மையைக் கக்கினார்**

மேல்சபையில் கனம் அமைச்சர் பேசுகையில், தன்னையறியாமலேயே ஒரு உண்மையைக் கக்கி விட்டார். அதாவது, சிவில் சப்ளை கமிஷனரானவர், நியாய விலைக்கடைகளுக்கு அரிசியின் சில்லரை விற்பனை விலையை நிர்ணயித்தபோது, பகிரங்க மார்க்கெட்டில் விற்கப்படும் விலையை அனுசரித்தே நிர்ணயித்தார் என்று அமைச்சர் கூறியுள்ளார். ஜூலை மாத மத்தியில் தான் நியாயவிலைக் கடைகள் திறக்கப்பட்டன. அந்த மாதத்தில தான் அரிசியின் விலை உச்சகட்டத்தில் இருக்கிறது என்பதை அனைவரும் ஞாபகத்தில் கொள்ளவேண்டும். இதிலிருந்தே உண்மை வெட்டவெளிச்சமாகி விட்டது. இப்பொழுது அமைச்சர் வெளியிட்டிருக்கும் அறிக்கையானது, மேல் சபையில் அவர் தன்னையறியாமலே கக்கிவிட்ட உண்மையாகவே விடப்பட்ட அறிக்கை யென்பது தெளிவு.

சிவில் சப்ளை கமிஷனரின் போக்கானது, ஆரம்ப முதலே, பெரு நிலப்பிரபுக்களுக்கும் பெரும் சேமிப்பாளர்களுக்கும் உதவி செய்வதாகவே இருந்து வருகிறது. இந்த உண்மையை இவ்வருடம் பிப்ரவரி 7-ம தேதியிலும் 14ம் தேதியிலும் அவர் விடுத்த அறிக்கையிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். சி. ஓ 25 ரகமானது, கட்ட சம்பாவைக் காட்டிலும் தாழ்ந்த தரமானது என்று அவரே ஒப்புக்கொண்டிருக்கிறார். அப்படியிருந்தும் கூட, கட்ட சம்பா அரிசியின் விலையாகிய மணங்கு 17 ரூபாயையே சி ஓ 25 ரகத்திற்கும் விலையாக நிர்ணயிக்க அவர் தயங்கவில்லை. இந்த மட்டரகமான சி ஓ 25 அரிசி தான் தஞ்சையில் கொள்முதல் செய்த அரிசியில் 90 சதத்துக்கு மேற்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

**தட்டிக் கழிக்கிறது**

கூட்டுறவு சங்கங்களின் மீது பழி போட்டுவிட்டு, இவ்வாறு நியாயமற்ற விலை மட்டத்தை வைத்திருக்கும் சர்க்கார்தான் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முடியாது. இந்தக் கூட்டுறவு சொஸைட்டிகள் பெரும்பாலும் பெரும் நிலப்பிரபுக்கள் கையிலும் லாபமே குறியாகக் கொண்ட இதரர்கள் கையிலும் இருக்கின்றன. இந்த சொஸைட்டிகள் மூலம் அரிசி வாங்குபவர்களுக்கு நியாய விலைக்கு அரிசி கிடைக்க உத்தரவாதம் அளிக்க முடியாவிட்டால், சர்க்கார் தானாகவே தனதுபொறுப்பில் ஏற்பாடுகள் மூலம் நேரடியாகக் கொள்முதல் செய்து பட்டணம் படி அரிசி 12 அணாவுக்குக் கொடுக்க முன்வர வேண்டும்.

**அக்கறை உண்டா?**

நியாயவிலைக் கடைகளில் அரிசி விற்பனை விலையை உடனடியாகக் குறைக்க சர்க்கார் மறுக்குமானால், விலைவாசிகளைக் குறைக்க வேண்டும் என்று அக்கறை காட்டுவதாக சர்க்கார் பீத்திக் கொள்ளுவதை பெ...

## விபத்தில் தொழிலாளி மரணம்

சென்னை, அக். 4—

வெங்கடசாமி நாயக்கர் என்ற ரிவிட்டர் தொழிலாளி 22-9-59-ல் எம். எஸ். சர்வலாஞ்சல் வேலை செய்கையில் மேலே இருந்து விழுந்து தலையில் பலத்த காயமுற்றார். ஜெனரல் ஆஸ்பத்திரியில் சிகிச்சை நடந்தது. அத்தொழிலாளி குணமாகாமல் கால...

## ஆஸ்திரிய ஜனாதிபதி ரஷ்யா விஜயம்

மாஸ்கோ, அக். 5—

ஆஸ்திரியா நாட்டின் ஜனாதிபதி டாக்டர் அடால்ப் ஷாரிப் இங்கு வந்து சேர்ந்தார். விமான நிலையத்தில் சோவியத் நாட்டின் ஜனாதிபதி வரோஷிலாவ் வரவேற்றார் ... இவர்



## மார்க்கெட் நிலவரம்

**தங்கம், வெள்ளி**

சென்னை, அக் 7

| | |
|---|---|
| சவரன் | ரூ. 80 0-0 |
| தங்கம் (ரெடி) | ரூ. 124 12-0 |
| மூசை தங்கம் | ரூ. 112- 4-0 |
| வெள்ளி 100 தோலா எடை | ரூ. 807-12-0 |
| வெள்ளி 1 ரூ. எடை | ரூ. 2-1-6 |

**மணிலா பயறு**

| | |
|---|---|
| 681 ராத்தல் கொண்ட பாரம் 1-க்கு உயர்ந்த ரகம் | ரூ. 200 |
| மீடியம் | ரூ. 205 |

**மணிலா எண்ணெய்**

600 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி (8 F.F.A.) (மொத்தவிலை) ரெடி

| | |
|---|---|
| | ரூ. 376-00 |
| அக்டோபர் | ரூ. 364 00 |
| நவம்பர் | ரூ 344 00 |
| டிசம்பர் | ரூ. 335 00 |

**விளக்கெண்ணெய்**

| | |
|---|---|
| 500 ரா. பாரம் 1-க்கு(மதராஸ் கிடங்கு டெலிவரி) திருப்பத்தூர் | ரூ. 335-00 |
| சேலம் தாமரை அன்னம் 37½ ரா. டின் விலை | 26-00 |

**தேங்காய் எண்ணெய்**

87 ரா. கொண்ட பாரம் 1-க்கு (விற்பனை வரி உள்பட) கொள்ளும் சரக்கு

| | |
|---|---|
| எம். எஸ். மார்க்கு | 42-00 |
| அம்பு மார்க்கு | 41-00 |
| ராஜா மார்க்கு | 41-00 |

**சர்க்கரை**
(8 அச்சு)

113-00

## வானொலி

**சென்னை-1**

9—10—59

காலை முதல் ஒலிபரப்பு
6-55 மங்கள இசை, 7-00 துதிப்பாடல்கள், 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் வானிலை அறிவிப்பு, 7-15 தமிழில் செய்தி, 7-30 சகலகலாவல்லி 8-00 மதுரகீதம் 8-15 ஒலிபரப்பு முடிவு

இரண்டாவது ஒலிபரப்பு
1-00 மாதர் நிகழ்ச்சி, 1-30 கானமஞ்சரி, 1-40 ஹிந்தியில் செய்தி, 1-50 இசைச்செண்டு, 2-00 தமிழில் செய்தி, 2-10 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றாவது ஒலிபரப்பு
5-30 கிளாரினெட் ஆ இ ரே. வித்வான். 5-45 காந்தி சர்ச்சு, 6-00 பஜனை. 6-05 பிராந்தியச் செய்திகள், 6-15 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சி அஞ்சல்) 7-15 தமிழில் செய்தி, 7-30 நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் நாதஸ்வரம் வலங்கைமான் ஷண்முகசுந்தரம் தவில், 9-00 சதம்பம், 9-15 வாத்ய கோஷ்டி, 9-30 மெல்லிசை, 9-45 இசை அமுதம் 10-30 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு

**திருச்சி**

9—10—59

காலை முதல் ஒலிபரப்பு
7-00 இசைக்கதிர் துதிப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7-15 தமிழில் செய்தி 7-30 சகல கலாவல்லி (சரஸ்வதி பேரில் பாடல்கள்) 8-00 ஆங்கிலத்தில் செய்தி 8-15 ஒலிபரப்பு முடிவு

இரண்டாவது ஒலிபரப்பு
1-00 மாதர் நிகழ்ச்சி (சென்னை 1-ல் உள்ளபடி) 1-30 வாத்ய இசை 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 குரல் இசை 2-00 தமிழில் செய்தி, 2-10 கண்டதேவி எஸ். திருவேங்கடம் ஐயங்கார் பாட்டு 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றாவது ஒலிபரப்பு
4-45 விவித பாரதி கர்நாடக சங்கீத நிகழ்ச்சி (பம்பாய் அஞ்சல்) 5-45 காந்தி நினைவுரை 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள், 7-15 தமிழில் செய்தி, 7-30 நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் நாதஸ்வரம் 9-00 ஆங்கிலத்தில் செய்தி, 9-15 சந்தத் தமிழ் மாலை 9-30 மெல்லிசை (சென்னை 1-ல் உள்ளபடி) 9-45 ராடிகொண்டான் வெங்கடராமய்யா 10-00 ஒலிபரப்பு முடிவு.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ். கிருஷ்ணசாமி
ஆசிரியர், ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, பிராட்வே, சென்னை-1
Janasakthi